நான்காம் புஸ்தகம்



# ஜனாபிமானி வாசகம்

அன்னபூரணி தேவசகாயம்

எழுதியது

சென்னை :
...சாமி நாயுடு அண்டு ஸன்ஸ்
1932

# ஜனாபிமானி வாசகம்

## நான்காம் புஸ்தகம்



அன்னபூரணி தேவசகாயம்

எழுதியது




சென்னை:

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1932

ரெஜிஸ்தர் செய்தது] [விலை 5 அணா

# முகவுரை

இந்தப் புஸ்தகத்தில் உள்ள இலக்கணப் பாடங்களைக் கருத்தாய்க் கற்பிப்பதோடு, நாள் தோறும் கூடுமானல் இலக்கண அப்பியாசங்கள் கொடுப்பது உசிதம்.

வாசக பாடத்திலும் செய்யுட் பாடத்திலும் எழுத்துப் பாடத்திலும் இலக்கணத்தில் கற்றுக்கொண்ட விதிகளை எடுத்துக் காட்டுவது அவசியம். இதில் உள்ள என் தோட்டம், நகை என்ற இனிய பாடல்களை அருளிச்செய்த ராஜ சூடாமணி அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தன மளிக்கிறேன்.

சிறுவர் பாடங்கள் சம்பந்தமாய் இயற்கை அற்புதங்களைக் கவனித்து உணரும்படி அவர்களை வெளியே வயல், ஏரி, ஆறு, மலைகளுக்கு அழைத்துச் செல்வது நலம்.

அ. தேவசகாயம்.

# பொருள் அடக்கம்

| எண் | விஷயம் | பக்கம் |
|---|---|---|

# ஜனாபிமானி வாசகம்

## நான்காம் புத்தகம்

### I. ஔவையார்

பூர்வகாலத்தில் தமிழ் நாட்டில் கவிபாடு வதில் கைதேர்ந்த சில வித்வான்கள் இருந்தார் கள். அவர்களில் ஔவை என்று ஒரு அம்மை இருந்தாள். அவளைப்பற்றி மூன்றும் புஸ்தகத் தில் சில விஷயங்கள் பேசினோம். இன்னும் சில விஷயங்கள் இன்று பேசலாம்.

தமிழ்நாடு என்று இந்தியாவில் எந்தபாகத் திற்குப் பெயர்? இந்தியாவின் தென் கோடி பாகமான திருநெல்வேலி, மதுரை, இராமநாத புரம், திரிச்சினப்பள்ளி, தஞ்சாவூர், சேலம், கோயம்புத்தூர், வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கல்பட்டு முதலிய ஜில்லாக்களும் வேறு சில இடங்களுமே தமிழ்நாடு.

தமிழ்நாட்டில் பூர்வத்தில் மூன்று ராஜ்யங்கள் இருந்தன. அநேக வித்வான்கள் இருந்து மிகவும் நல்ல நூல்கள் எழுதினர்கள். நாம் அவர்கள் எழுதின கவிகளைப் படிக்கிறோம். தமிழ் நாட்டு மூன்று ராஜாக்களும் ஔவையார் சற்குணத்தையும் ஞானத்தையும் மிகவும் பாராட்டி அவளுடைய கவிகளை ஆசையோடு கேட்டார்கள். ஔவை நல்லவள். இரக்கம் நிறைந்தவள். தனது சுகத்தைப் பெரிதாய் எண்ணமாட்டாள். கடவுள் எப்போதும் அவளுடைய விண்ணப்பத்தைக் கேட்டு பலன் அளித்தார். என்றாலும் அவளிடத்தில் கர்வம் காணப்பட இல்லை.

ஔவை ஒருநாள் வழிநடந்து போகும் போது பெருமழை பெய்து நனைந்துபோனாள். குளிர் தாங்க முடியாமல் வருந்தி ஒரு குடியானவன் வீட்டுக்குப் போனாள். அவள் கையில் மாற்று உடை கிடையாது.

குடியானவனுக்கு அங்கை சங்கை என்று இரண்டு பெண்மக்கள் இருந்தார்கள். அவர்கள் ஔவையாரின் கஷ்டத்தைப் பார்த்து வருந்தி, "பாட்டி அம்மை, உள்ளே வாருங்கள்" என்று அழைத்து வீட்டுக்குள் கொண்டு போனார்கள். அனல் அண்டை அவளை உட்காரவைத்து, அவள் தலை உடம்பெல்லாம் ஈரம் போகத்

துடைத்து, சூடு உண்டாக்கினார்கள். பின்பு தமக்கு இருந்த அழகான நீலப் புடவையை உடுத்தி அவள் வருத்தம் நீக்கினார்கள். ஔவை சற்று நேரம் தூங்கி விழிக்கிறதற்குள் கேழ்வரகுக்களி செய்து முருங்கைக்கீரை சமைத்து, நெய்யோடுகூட அம்மைக்குக் கொடுத்தார்கள்.



இவ்வளவு உபசரணையும் பெற்ற அம்மை சும்மா இருப்பாளா? மிகுந்த மதுரவார்த்தைகளால் அப் பெண்களை வாழ்த்தி ஒரு கவி பாடினாள். அந்த க்ஷணமே அவர்களுடைய தரித்திரம் நீங்கினது. அவர்கள் பெரும் பணக்காரர் ஆனார்கள். மேலும் அந்தக் கன்னிகைகளுக்குக் கல்யாணம் நிறைவேற்றி வைக்க விரும்பினாள். அப்படியே வரன்களும் வந்து சேர்ந்தார்கள்.

கல்யாணத்துக்கு தமிழ்நாட்டு அரசர் மூன்றுபேரும் வராமல் தீராது என்று நினைத்தாள். உடனே கடிதம் எழுதும்படி விநாயகக்கடவுளைப் பிரார்த்தித்தாள். அவரும் தடையின்றி வந்து மண ஓலை எழுதிக்கொடுத்தார். ஔவை அதை வனதேவதை ஒருத்தியிடம் கொடுத்து மூன்று ராஜாக்களுக்கும் அனுப்பினாள். அரசரை அழைப்பதானால் அதற்குத்தகுந்த மரியாதையுடன் அல்லவோ அழைப்பு ஓலை அனுப்ப வேண்டும் என்பது அவளுடைய கருத்து.



ஔவையாருடைய கண்டிப்பான கட்டளைப்படி அவர்கள் திருக்கோயிலூர் போய் சேர்ந்தார்கள். அவர்களுடைய பரிவாரங்கள் அவ்வூரை நிரப்பியதால் அது ஒரு சிறந்த நக

ரம்போல் விளங்கியது; ஔவையார் சந்தோஷப்பட்டாள். கல்யாணம் முடிந்து தாம்பூலம் கொடுக்கும்போதே, மூன்று அரசரும் சாப்பாட்டுக்கும் வரும்படி கேட்டாள். செலவுக்காக ஊரின் அருகில் உள்ள பாலாற்றில் பால் ஒரு பக்கமும், நெய் ஒரு பக்கமும் பெருகிவரச் செய்தாள்.

அரசர் அவளைக் கேலி பண்ண நினைத்து, "அம்மா நீ நொங்குதந்தால் உன் விருந்துக்கு வருவோம்" என்றார்கள். கிழவி இதற்குப் பயந்தவளா? அது நுங்குக் காலமில்லை. இடையன் வீட்டு வாசலில் பட்டுப்போன பனைமரம் ஒன்று கிடந்தது. ஔவை எல்லாருக்கும் கட்டளையிடுவதுபோல் பனைமரத்துக்கும் ஒரு கட்டளையிட்டு கவிபாடினாள்.

அதன் கருத்து: "பனைமரமே கேள், அங்கை சங்கை கல்யாணத்திற்குத் தமிழ்நாட்டு அரசர் மூன்றுபேரும் வந்திருக்கிறார்கள். இவர்களுக்கு உனது நுங்குமேல் உள்ள ஆசை கொஞ்சமல்ல. நீ இப்போது நல்ல மனம்வைத்து ஆளுக்கு மூன்று காயாக ஒன்பது காய் உடனே கொடு" என்பதே.

பனைமரம் குருத்துவிட்டு, ஓலையாகி, பாளைவிட்டுக் காய்விட்டு அம்மைசொல் நிறைவேற்றி நின்றது. அரசர் மூன்றுபேரும் "இனி இந்தக்

கிழவியோடு வாய் கொடுக்கப்படாது என்று எண்ணிக் கொண்டார்கள். சாப்பிட்ட பின்பு தம்பதிகளுக்கு வரிசை கொடுத்து வாழ்த்திவிட்டுப் போனார்கள். சேரராஜா ஒரு பொன் ஆடு கொடுத்தான்.





## 2. தாதா

தாதா நல்லவர். சோம்பல் குணம் அவரிடத்தில் அணுவளவும் கிடையாது. அவர் காலையில் 5 மணிக்கு எழுந்திருந்து காவேரி ஆற்றில் ஸ்நானம் செய்யப்போவார். அவர் வேஷ்டி தோய்த்து, குளித்து ஜெபதவம் முடித்து வெளியேறும் வரையில் அவரோடு போன நானும் என் தம்பிமாரும் ஜலத்தில்

மனம்போல் விளையாடி வெளி யேறுவோம். பின்பு அவசரம் அவசரமாய் வேஷ்டியை நனைத்துப் பிழிந்து எடுத்துக்கொள்வோம்.

வீட்டுக்கு வருகிற வழியில் தினந்தோறும் தாத்தாவோடு ஆநந்தமாய் சம்பாஷிப்போம். ஒரு நாள் ஒவ்வொருவரும் தாத்தாவை கேள்வி கேட்போம்.

**பேரன்** — தாதா ! உங்களுக்கு வயது என்ன ?

**தாதா** — இப்பொழுது 78 நடக்கிறது.

**பேரன்** — 78 வயதில் எவ்வளவு விநோதம் பார்த்தீர்கள்?

**தாதா** — நான் கண்ட விநோதங்கள் அதிகம்.

**பேரன்** — எங்களுக்கு அதெல்லாம் சொல்ல வேண்டும். தாதா ! வயது 78 ஆகியும் இன்னும் பலமாய் இருக்கிறீர்களே அது எப்படி ?

**தாதா** — சுகத்துக்கு விரோதமான காரியம் ஒன்றும் நான் செய்யவில்லை. வைத்திய ரைத் தேடி மருந்து வகைகள் சாப்பிட வில்லை. அதி காலையில் குளிர்ந்த ஜலத் தில் நீராடி வருகிறேன்.

**பேரன்** — இதனால் சுகமும் பலமும் வந்து விடுமா ?

தாதா — தனிமரம் தோப்பாகாது.

**பேரன்** — வேறு என்ன காரணங்கள்? தாத்தா சொல்லுங்கள்.

தாதா — சோம்பல் பல தீமைகளுக்கும் தாய். தேக சுகத்திற்கு விரோதி. நான் ஒரு நாளும் சோம்பலாய் இருக்கவில்லை.

**பேரன்** — என்ன வேலை செய்தீர்கள்?

தாதா — நமது வீட்டைச் சுற்றி உள்ள மரங்கள் நான் உங்களைப்போல் சிறுவனுய் இருக்கும்போது நாட்டினவைகள்......

**பேரன்** — நமது பலாமரங்கூடவா?

தாதா — ஆம்; பலா, தென்னை, மா மரங்கள் எல்லாம். இப்போது அவைகள் பழம் காலம் தவருமல் கொடுக்கின்றன.

**பேரன்** — தோட்டத்தில் தினந்தோறும் வேலை செய்கிறீர்களே உங்களுக்குச் சலிப்பாய் இல்லையா?

தாதா — அப்பா, வேலை செய்ய மனதில்லாதவன் சாப்பிடக்கூடாது. மேலும் தோட்டத்தில் வேலை செய்வது குழந்தைகளுடன் விளையாடுவதற்குச் சரி. அதனுல் தோட்ட வேலை மிகவும் இன்பமானது.

**பேரன்** — நீங்கள் பந்தாடப் போகிறதே இல்லையா?

**தாதா** — எனக்குப் பந்தாட்டத்தின் மேல் விருப்பம் இல்லை.

**பேரன்** — எங்களுக்குப் பந்தாட்டம் எவ்வளவு பிரியம்.

**தாதா** — எனக்குப் பயிர்கள் நடுவில் நின்று களை பிடுங்கி நீர் பாய்ச்சுவதும் அவ்வளவு பிரியம்.

**பேரன்** — உங்களுக்குப் பயிர் வேலை செய்ய வெட்கமாய் இராதா ?

**தாதா** — பெருமையாய் இருக்கிறது. பயிர்கள் கதிருடன் நிற்பதும் காய்கள் கிழங்குகள் செடியில் காணப்படுவதும் எனக்கு அளவற்ற சந்தோஷம். புத்திமான்கள் ஒருவராவது கை வேலையை அலக்ஷியம் பண்ணினதில்லை. அதற்கு இரண்டு நல்ல திருஷ்டாந்தங்கள் சொல்லுகிறேன் :

இங்கிலாந்தில் கிளாஸ்டன் என்று ஒரு பிரதான மந்திரி இருந்தார். அவர் கல்விக் களஞ்சியம். அழியாப் புகழ்படைத்தவர். அவர் தேகாப்பியாசம் செய்வதற்குப் பதில் கட்டை வெட்டுவார். அவருக்குப் பிறந்தநாள் இனாமாக சிநேகிதர் பலர் கோடாலி கொடுத்தார்கள்.

ரஸ்கின் என்று பெயர் பெற்ற சீமான் ஒருவர் இருந்தார். அவரும் அவருடைய

தோழர் பலரும்கூடி பந்தாடுவதற்குப் பதில் ஒரு நல்ல ரோட்டுப்பாதை போட்டார்கள்.

"தாதா, நீங்கள் என்ன பரீக்ஷையில் தேறினீர்கள்" என்று ராஜா மகா துடுக்காய்க் கேட்டான்.

தாதா அவனுடைய முதுகைத் தடவி "பரீக்ஷதானு அறிவை உண்டாக்கும்? நமது வீட்டில் இருக்கிற சோற்றுப்பானையும் அகப்பையுமா நமக்குச் சாப்பாடு கொடுக்கிறது? மேலும் புஸ்தகங்களால் மாத்திரம் கல்வி கற்க முடியாது? ஆகாச மண்டலமும், பூமியின் பூண்டுகளும் பிராணிகளும் கடல், மலை, ஆறு முதலான சிருஷ்டிப் பொருள்களும் நாம் வாசித்து அறியவேண்டிய சுவடிகளாம்" என்றார். உடனே நாங்களும் இனித் தோட்டத்தில் வேலைசெய்ய வேண்டுமென்று பேசிக்கொண்டோம்.

ஊரில் நடக்கும் வழக்குகளைத் தீர்க்கத் தாதாவைக் கூப்பிடுவார்கள். அவர் சொன்னால் எல்லாரும் பொதுவாய் ஒப்புக் கொள்வார்கள். எல்லாரிடமும் சந்தோஷமாய்ப் பேசுவார்.

ஒரு நாள் தாதா நகர பரிபாலன சபைக்குப் போகப் புறப்பட்டார். கண்ணாடியைத் தேடினார். தாதாவுக்கு அவசரம். அம்மாவை

அழைத்து வந்தோம். அம்மை வந்தவுடனே "அப்பா இதோ போட்டுக்கொண்டு தானே தேடுகிறீர்" என்ருள். எல்லாரும் எப்படி சிரித்தோம் தெரியுமா?

---

**வினு:**

1. தாதா செய்யும் காரியங்கள் எவை?
2. தாதாவை எல்லாரும் தேடுவது எதற்காக?
3. தோட்டவேலை செய்வதனுல் என்ன பயன்?
4. எதனுல் தாதா பலசாலியாய் இருந்தார்?



# 3. காப்பிரி அடிமைகள் வாசிக்கப் படித்த கதை

வாசிக்கத் தெரியாதவன் கண் தெரியாத குருடனைப்போல் இருக்கிருன். குருடனுக்குப் பார்வை கொடுப்பது எவ்வளவு பெரிய தருமம்! புஸ்தகம் படிக்கத் தெரியாத ஜனங்களுக்கு வாசிப்பு கற்றுக் கொடுப்பதுவும் அவ்வளவு பெரிய உபகாரந்தான். இந்தியாவில் 100 பேரில் சுமார் ஒன்பது பெயருக்கு வாசிக்கத் தெரியும். பாக்கி 91 பெயருக்குத் தெரியாது. வாசிப்புத் தெரியாத ஜனங்களுக்கு வாசிக்கக் கற்றுக்கொடுப்பது பெரிய தருமம்.

அமெரிக்காக் கண்டத்தின் ஓரத்தில் சில நல்ல செழிப்பான தீவுகள் இருக்கின்றன. அங்கே வெள்ளை மனிதருக்கு நல்ல வீடும் தோட்டங்களும் உண்டு. அந்தத் தோட்டங் களில் கருப்பு மனிதர் வேலை செய்து வந்தார் கள். அந்தக் கருப்பு மனுஷர் அடிமைகள். அவர்கள் அதிக வேலை செய்யவேண்டும். கூலி கொஞ்சம் கிடைக்கும் அல்லது சாப்பாடு கிடைக்கும். எஜமானர் இட்ட வேலை எல்லாம் கண்டிப்பாய் செய்யவேண்டும். சுயாதீனமாய் திரிய முடியாது. நினைத்த காரியம் தனது இஷ்டம்போல் செய்யவும் முடியாது. தற் காலம் அடிமைகள் பொதுவாய் இல்லை.

மேல் இந்தியத் தீவுகளில் ஒரு காலத்தில் ஒரு கூட்டம் சேவகர் தங்கி இருந்தார்கள். அவர்களில் ஒரு நல்ல மனுஷன் இருந்தார். அவர் வாசிப்புத்தெரியாத இந்த அடிமைகளைக் கண்டு மிகவும் பரிதாபப் படுவார். அடிமை களில் தாமஸ் என்னும் ஒருவனை அவர் பார்த் துப் பேசின காரியம் கேட்போம்.

"தாமஸ்".

"எஜமானே!"

"உனக்குப் படிக்கப் பிரியமா?"

"எனக்கு நிரம்ப ஆசை. யார் என்னைச் சட்டைபண்ணிச் சொல்லிக் கொடுப்பார்?"

"நீ எனக்கு ஒரு வேலை செய்தால் நான் போதிக்கிறேன்."

"ஆண்டவன் காலால் இட்ட வேலையைத் தலையாலே செய்கிறேன்."

"உனக்கு வாசிக்கத் தெரிந்தவுடனே நீ ஒரு ஆளுக்கு வாசிப்புக் கற்றுக் கொடுக்கவேண்டும். செய்வாயா ?

"அப்படியே செய்கிறேன் இது உறுதி வாக்கு" என்று தாமஸ் சொன்னான்.

சில நாளுக்குள் தாமஸ் வாசிக்கக் கூடியவன் ஆனான். சில மாதங்களுக்குள் நன்றாய் எதையும் வாசிப்பான். அப்பொழுது தன்னோடு வேலைசெய்கிற அடிமைகள் பலருக்கு வாசிப்பு வித்தையைப் போதித்தான். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் சிநேகிதருக்கு வாசிப்புக் கற்பித்தார்கள். இது அங்கே மாறாத வழக்கமாயிற்று. இந்தக் காரியம் எஜமானுக்கு மகா விசனமாய் இருந்தது. அவன் தாமஸுக்குக் கண்டிப்பாய் வாசிக்கக் கற்றுக்கொடாதே என்று கட்டளை யிட்டான். இரத்தம் ஒழுக அடித்தான். என்ன செய்தாலும் தாமஸ் தான் செய்த தரும வேலையை நிறுத்தவே யில்லை. அவனை அங்கிருந்து வேறொரு எஜமானுக்கு விற்றுப் போட்டார்கள்.

தாமஸ் போன புதிய இடத்திலும் அநேக ஜனங்களுக்கு வாசிக்கக் கற்பித்தான். அவனிடம் படித்தவர்களும் ஒவ்வொரு ஆளுக்குக் கற்பித்தார்கள். ஆகவே அநேக ஜனங்கள் புஸ்தகம் படிக்கத் தெரிந்து கொண்டார்கள். இப்படி யிருக்கும் பொழுது நிகிரோவர் எல்லாரும் ஒருநாள் விடுதலையானுர்கள். அவர்கள் இஷ்டப்பட்ட இடங்களுக்குப்போக சுயாதீனம் கிடைத்தது. அதற்காக உலகத்தில் உள்ள நல்ல மனுஷர் எல்லாரும் சந்தோஷப்பட்டார்கள்.

அப்போது நிகிரோவரில் வாசிக்கத்தெரிந்தவர்களுக்கு வேதாகமம் கொடுக்கும்படி வேதாகம சங்கத்தார் விரும்பினுர்கள். எத்தனை புஸ்தகம் வேண்டு மென்பதாய்க் குருவானவரைக் கேட்டார்கள். அவர் 50 புஸ்தகம்கூட வேண்டியதில்லை. இங்கே யாருக்கு வாசிப்புத் தெரியும்'' என்ருர். கணக்கு எடுத்தபோது 600 புஸ்தகம் வேண்டியதாய் இருந்தது. தாமஸுடைய உதவியாலும் அவனது சீஷர் முயற்சியாலும் இவ்வளவு ஜனங்கள் கல்வி அறிவுபெற்ருர்கள்.

தமிழ்ப் பாஷை வாசிக்கச் சுலபமான பாஷை. ஒரு வாரத்தில் படிக்கலாம். ஆகிலும் நமது நாட்டில் ஆயிரம் ஆயிரம் ஜனங்களுக்கு வாசிக்கத் தெரியாது. வாசிப்பு சொல்லிக் கொடுப்பது பெரிய தருமம்.





# 4. நரி

நரியைப் பார்த்தீர்களா? அது ஒரு சிறிய நாய் அளவு பருமனாய் இருக்கும். செடிகள் புதருக்குள் வாசஞ்செய்து கோழி, வாத்துத் திருடி ருசியாய் சாப்பிடும். அது மகா தந்திரவாதி.

ஒரு நாள் ஒரு நரி கோழிக்கூடு ஒன்றிற்குள் போனது. தனக்குப் பிரியமான ஒரு நல்ல கோழியைப் பிடித்துக்கொண்டு ஓடிப் போகவில்லை. நல்ல கோழிகள் அநேகத்தைக் கடித்துக் கொன்று வயிறு நிறைய சாப்பிட்டது. கூண்டு திறக்கும் நேரமானது. செத்த பிணம் போல் காலை நீட்டி வாலை ஆட்டாமல் படுத்துக் கொண்டு இருந்தது. கண் திறக்கவே யில்லை.

கூண்டு திறந்தவள் பார்த்தாள். என் கோழிகளைக் கொலை பண்ணின படுபாவி நரி செத்துக் கிடக்கிறது என்று இடது கையால் வாலைப் பிடித்துத் தூக்கி குப்பை மேட்டில் போட்டாள். உடனே நரி எழும்பி சிரித்துக் கொண்டே ஓட்டம் பிடித்து காடு சேர்ந்து சுகமாய் வாழ்ந்தது.



## 5. தபாலாபீஸ்

தங்கவேலு — நமது தபால்காரன் சோனை முதலி. சோனை மாசிக்காய் நிறமான கால் சட்டையும் சட்டையும் போட்டு, அதே நிறத் தலைப்பாகையும் வைத்திருக்கிறான்.

முருகேசன் — "சோனை நல்லவன். கடிதங்களைத் தாமதம் பண்ணமல் ஒழுங்காய் கொண்டு வந்து கொடுப்பான். அவன் கையில் சிறிதும் பெரிதுமான கடிதங்கள் வைத்திருக்கிறான். முதுகில் ஒரு மூட்டை வைத்திருக்கிறான். அவன் அநேக கல்யாணக் கடிதங்கள் வைத்திருக்கிறான். சில துக்க செய்திகளும் அவனிடம் உண்டு."

தங்கவேலு — "இப்போது சோனை கடைத் தெருவில் வெகு அவசரமாய்க் கடிதம் கொடுக்கிறான். கடைக்காரர் அவன் வரு

கைக்காக ஆவலாய்க் காத்திருக்கிறார்கள். அவன் கொடுக்கும் கடிதங்கள் பார்த்து மற்ற இடங்களில் சரக்கு விலை எவ்வளவு என்று அறிந்து கொள்ளுவார்கள். பருத்தி விலை பம்பாயில் அதிகமாயிற்று என்று செய்தி வந்தால் இங்கே துணி விலை அதிகமாகும். அப்படியே எல்லாப் பொருட்களும்; மேலும் தினசரிப் பத்திரிகைகள் விலைகளின் தன்மையை வெகு தெளிவாய் அறிக்கை பண்ணுகின்றன. அதற்குத் தகுந்தபடி கடைக்காரர் எல்லாரும் தமது சரக்கு விலைகளை உயர்த்துவார்கள். அல்லது குறைப்பார்கள்.

**மகம்மத்அலி** — நாலு நாளைக்கு முன் பட்டணத்து அடிசன் கம்பெனிக்கு ஒரு சைக்கில் வண்டி அனுப்பும்படி அப்பா எழுதினர். அவர்கள் அனுப்பிவிட்டதாக இன்று கடிதம் வந்திருக்கிறது. வாருங்கள் நாம் எல்லோரும் இன்று மாலை ரெயில்வேஸ்டேஷன் வரைபோய் அதை எடுத்து வருவோம்.

**தங்கவேலு** — தீபாவளிக்கு எனக்கு வேண்டிய வேஷ்டி, சொக்காய் எல்லாம் பட்டணத்திலிருந்து வரும். அதற்கு 40 ரூபா கட்டி வாங்கவேண்டும். ஒரு நாள் அண்ணு அம்

மாப்பேட்டைப் புடவை மூன்று காரைக் குடி ராமசாமி செட்டியாருக்கு அனுப்பி னுர். புடவை ஒவ்வொன்று ரூபா 200. அவற்றைச் சேர்த்து மூட்டையாய்க் கட்டி சீல்வைத்து ஒரு ரூபாய் முத்திரை ஒன்று ஒட்டி எங்கள் கடையில் வேலே செய்கிற பொன்னுசாமி வசம் அனுப்பி னுர். அவன் தபால் ஆபீஸில் கொடுத்து ரசீது வாங்கிக்கொண்டு வந்தான்.




அண்ணு — அடே இன்ஷுயர் செய்தாயா என்ருர். அவன் என்ன எனக்குத் தெரி யாதா? சீத்தாராம செட்டியார் கடையில் தினமும் எத்தனே மூட்டை நான் அனுப்

புவேன்'' என்ருன். ஆகவே புடவை அனுப்பி 5 நாளில் ரூ 600 ஒரு பைசாக் குறையாமல் வந்து சேர்ந்து விட்டது.

**முருகேசன்** — இதோ துவிச்சக்கர வண்டியில் போகிருனே, இவன் யார்? சேனே மாதிரியே உடுத்தி யிருக்கிருன்.

**தங்கவேலு** — இவன் தந்திஆபீஸ் சேவகன். அவன் பெயர் எனக்கு ஞாபகம் இல்லே. நேற்று மாமா வருவதாகச் செய்திகொண்டு வந்தான்.

**மஹம்மத் அலி** — மாமா வந்தாரா?

**தங்கவேலு** — ஆஹா, வந்தார். ஒரு நாள் பாஷ்கர் அண்ண இங்கிலாந்து போய்ச் சேர்ந்தார் என்ற செய்தி வந்தது. அம்மா, சேவகனுக்கு இரண்டு அணக்கொடுத்தாள்.

**முருகேசன்** — வாருங்கள் நாம் மூன்று பேரும் பெரிய தபாலாபீஸ் வரையில் போய் பார்த்து வருவோம். வெளியே தபால் முத்திரை விற்கிறவன் உட்கார்ந்து இருக் கிருன். அவனிடம் கார்ட், கவர், முத்திரை யில் எல்லா தினுசுகளும் இருக்கிறது. நமக்கு ரிஜிஸ்டர் செய்யும் கவர் நாலும் சாதாரணக்கவர் கார்ட் எல்லாம் சேர்த்து 5 ரூபாய்க்கும் வேண்டியதாய் இருக்கிறது.

**மஹம்மத்அலி** — தபாலாபீஸ் பார்க்க நல்ல இடம்தான். அதோ பார் சங்கரன்மூட்டை இடை போடுகிறான்.

**தங்கவேலு** — இது ஈஸ்வரச் செட்டியார் கடைச் சரக்கு. எல்லாம் பட்டு சரிகை வேலை செய்த அங்கவஸ்திரத் தினுசுகள். பம்பாய், பூனா, ஜெய்ப்பூர், ஜப்பல்பூர், இந்துப்பூர் டில்லிவரை போகிறது. சங்கரன் இடைபோட்டு மூட்டைக்குத் தகுந்தபடி முத்திரை ஒட்டுகிறான்.




**மஹம்மத்அலி** — அதோ, பெருமாள் பணம் ஒரு குமஸ்தாவிடம் கொடுத்து, ஒரு புஸ்தகமும் கொடுக்கிறான்.

**முருகேசன்**—அதுதான் பேன்க் (நிதி). பணம் கொடுத்து வைத்தால் வட்டி கிடைக்கும்.

பணமும் பத்திரமாயிருக்கும். எப்போது வேண்டுமோ அப்போது வாங்கிக்கொள்ளலாம். வேறு ஒருவன் பணமும் ஒரு நீட்டக் கடுதாசியும் கொடுக்கிறான். அது என்ன தெரியுமா ?

மகம்மத்அலி — அது மணியாடர். நாம் இங்கே கொடுக்கிற ரூபாயும் காகிதமும் அப்படியே போய்ச் சேரும்.

இச்சமயம் பெரிய மோட்டார் ஒன்று நெடுந் தொனியுடன் அங்கே வந்தது. அதில் நிறைய தபால் பைகள் கிடந்தன. அவைகளை எடுத்து உள்ளே கொண்டு போகிறார்கள். இத்தனையும் அயல் இடத்துக் காகிதங்கள் முதலியவை.

தபால் ஆபீஸுக்குள் டப்பு குப்பு என்ற தொனி கேட்டது. என்ன என்று பார்த்தால், சகலகாகிதத்திலும் நமது ஊர்முகர் குத்துகிறார்கள்.

---

வினா :

1. தபாலாபீஸில் என்னவேலை நடக்கிறது ?
2. தந்தி இருப்தால் என்ன பயன் ?
3. நமது நாட்டில் எத்தனை விதமான முத்திரை வழங்கி வருகிறது.



# 6. இலக்கணப் பாடம் - I

(இப் பாடம் தள்ளிவிடாமல் அவசியம் போதிப்பது நன்மை.)

இலக்கணம் என்றால், தன்மை, சிறப்பு, விவரம் என்று அருத்தம். வார்த்தைகளுக்கு இலக்கணம் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியம்.

I

வார்த்தைகள் நாலுவிதம் கருத்தை வெளியிடுகின்றன.

**1. பெயர்ச் சொல் ;** பெயர் சொல்லுகின்றன.

உதாரணம் : மரம், துரைசாமி, காலை, சேலம், கால், சிவப்பு, வாசித்தல்.

**2. வினைச் சொல் :** வேலையைக் குறிக்கிறது.

செய்தான், இருந்தான், கொடுத்தான்.

**3. உரிச் சொல் :** சிறப்பைச் சொல்லும் வார்த்தை. செய்யுளில் வரும்.

**4. இடைச் சொல் :** வார்த்தைகளுக்கு இடையில் வரும் துணை வார்த்தைகள் தனியாய். எடுத்து அவைகளுக்கு அருத்தம் சொல்ல

முடியாது. அவைகள் இல்லாமல் கருத்தும் பூர்த்தி ஆகாது.

ஐ ஆல்
உதாரணம் : நாயைக் கல்லால் அடித்தான்.

ஐ போல் உம்
மனுஷனைப் போல குரங்கும் விளையாடும்.

இடைச் சொற்கள் ஐ, ஆல், போல், உம். அவற்றை நீக்கி வாக்கியத்தை எழுதிப் பார். அப்போது இடைச் சொல்லின் அருமை தெரியும்.

### அப்பியாசம்

பெயர், வினை, இடைச் சொற்கள் வகைக்கு பத்து உன் பாடத்திலிருந்து எழுது.



## 7. கஸ்டாவாஸா அரசனும் சிறு பெண்ணும்

ஐரோப்பாக் கண்டத்தில் ஸ்வீடன் என்று ஒரு நல்லதேசம் இருக்கிறது. அநேக வருடங்களுக்கு முன் கஸ்டாவாஸா என்ற பெயர் கொண்ட ஒரு ராஜா அதை ஆண்டு வந்தார். கஸ்டாவாஸா ராஜா தன் குடிகளுக்காகக் கவலைப்பட்டார். அவர் குடியிருந்த ராஜதானிக்கு ஸ்டக்கோம் என்று பெயர்.

ஒரு நாள் கஸ்டாவாஸா அரசர் தன்னுடைய நகரத்தின் பக்கத்தில் சவாரிபோனுர். அங்கே ஒரு கிணற்றில் தண்ணீர் மொள்ளும் சிறுபெண் ஒருத்தியைக் கண்டு, அவளிடத்தில் போய் 'அம்மணீ தாகமாயிருக்கிறேன்' என்ருர்.

பெண் "ஐயனே, தாகத்திற்குச்சாப்பிடும்" என்று சொல்லி தன் சிறு குடத்தை அவருக்கு நீட்டினுள்.

அரசன் சிறு பெண்ணின் கபடமற்ற குணத்தைப் பார்த்து சந்தோஷித்தார். அவளது ஏழைக் கோலம் பார்த்து இரங்கி, இவளுக்கு நான் உபகாரம் செய்யவேண்டும் என்று நினைத்தார்.

அவளை நோக்கி "குழந்தாய், உனக்கு நன்மை செய்ய விரும்புகிறேன். பட்டணத்தில் வாசம் செய்ய வருகிருயா ?" என்ருர்.

பெண் : "ஐயனே, அம்மை நோவாய் இருக்கிருள், நான் அவளை எவ்விதம் விட்டு வரக்கூடும்" என்ருள்.

ராஜ நான் வந்து அம்மாளைப் பார்க்கிறேன் என்று சொல்லி குதிரையிலிருந் திறங்கி அவள் வீட்டிற்குள் போனுர். அங்கே ஒரு மூலையில் வைக்கோல் படுக்கைமேல் படுத்திருந்த ஏழை மனுஷி ராஜாவைக் கண்டவுடனே எழுந்து உட்கார்ந்து அவருக்கு வந்தனம் செய்தாள்.

ராஜா அவளுடைய பலவீனத்தையும் எளிமையையும் கண்டு மனது உருகினார். வியாதிக்காரியிடத்தில் பட்சமாய்ப் பேசினார்.

“ஐயனே, என்குழந்தையின் கஷ்டப் பாட்டினால் நான் பிழைக்கிறேன். அதன் பலன் கடவுள் தான் அவளுக்குக் கொடுக்கவேண்டும்” என்று அந்த மனுஷி சொன்னாள்.

அரசர், “அம்மா, பயப்படாதே, கடவுள் அவளுக்குப் பலன் கொடுக்கும்படி என்னை அனுப்பினார். இதோ பார்!” என்று சொல்லிப் பொன் நாணயம் நிறைந்த பை ஒன்றைச் சிறு பெண் கையில் வைத்தார். மேலும் அவர்களை ஒரு நல்ல வீட்டில் குடியிருக்கக் கட்டளையிட்டு, அவர்கள் காலமெல்லாம் தகுந்தபடி காப்பாற்றி வந்தார்.

---

வினா, வேலை :

1. கஸ்டாவாஸா என்பது யார்?
2. அவர் இருந்த ஊர் எது? தேசம் எது?
3. சிறு பெண்மேல் ராஜா ஏன் சந்தோஷப் பட்டார்?
4. ராஜா செய்த உபகாரம் என்ன?
5. தண்ணீர்க்குடம் களிமண்ணால் செய், ஒரு கட்டில் பண்ணு.

# 8. மான் வீட்டில் நடந்த கல்யாண விருந்து

இந்தியாவின் வடகோடியில் இமயமலை என்று ஒரு பெரிய மலைத் தொடர் இருக்கிறது. அதில் அநேக மலைகள் உண்டு. பெரிய ஆறுகள் இமயமலையிலிருந்து இறங்கி வருகின்றன. அங்கே பெரிய மரங்கள் நெருங்கி வளர்ந்து நிற்கின்றன. ஆடு, காட்டு மாடு, மான், முயல், நரி, காண்டாமிருகம், கரடி, குரங்கு, புலி போன்ற பல ஜாதி மிருகங்களும் சந்தோஷமாய் உயிர் வாழுகின்றன.

அந்த இன்பமான காடுகளில் ஒன்ருன அற்புத ஆரணியத்தில் குணபூஷணி சுகுணன் என ஒருஜோடி மான்கள் இருந்தன. அவற்றின் தலையில் கவர் கவராய்ப்பிரிந்த பெரிய கொம்புகள் கிரீடஞ்சூட்டினுப்போல் இருந்தன. கால்கள் நீண்டு உருண்டு பலமானவைகள். ஓட்டத்தில் அவைகளுக்கு நிகர் வேறு மிருகங்கள் ஒன்றுமில்லை. கபில நிறமான உடம்பில் வெண் புள்ளிகள் பிரகாசமாய் காணப்பட்டன. அவைகள் புல் தின்று தெளிந்த தண்ணீர் குடித்தன. ஒரு பிராணியையும் கஷ்டப்படுத்தும் வழக்கம் அவைகளுக்கு இருக்கவில்லை. அதனுல் காட்டு மிருகங்கள் எல்லாம் அவைகளிடம் விசேஷமான நேசம் பாராட்டி வந்தன.

சுகுணன் மகள் ரஞ்சினிக்கு கல்யாணம் ஒழுங்கு பண்ணினர்கள். மாப்பிள்ளையும் ரஞ்சினியைப்போலவே அழகன். ஓட்டத்தில் வல்லவன். கல்யாணத்திற்கு எல்லாம் ஆயத்தமாயின. மேளவாத்தியக்காரனுக்குச் சொல்லியாயிற்று. பலகாரம் பக்ஷணம் எல்லாம் ஒன்று பாக்கியில்லாமல் தயார் பண்ணினர்கள். எல்லாரும் கல்யாண நாளுக்காகக் காத்திருந்தார்கள். பந்தல் ஜோடிப்பு நடந்தேறியது.

குணபூஷணி எல்லா ஜாதி மிருகங்களையும் அழைக்க விரும்பினள். சுகுணன் துஷ்ட மிருகங்களை அழைக்கச் சம்மதிக்கவில்லை. ஆகிலும் அவன் பேச்சு ஏறவில்லை. விருந்துக்கு யாரை அழைப்பது, தாம்பூலத்துச்கு யாரை அழைப்பது என்று யோசனை பண்ணினர்கள். துஷ்ட மிருகங்கள் தாம்பூலம் எடுத்துக் கொண்டுபோய் விடட்டும் என்று குணபூஷணி சொன்னள்.

யானை பந்தல் நிறைந்த ஜந்து. ஆனல் அதிகம் சாப்பிடும். குரங்கு வந்தால் கோமாளித்தனம் பண்ணும். சந்தோஷமாய் இருக்கும். கழுதை கபடமற்ற சாது. அதை எதிரில் பார்ப்பதும், குரலைக் கேட்பதும் மங்களம். அவசியம் கழுதை வரவேண்டும். மேலும் கழுதை சங்கீத ஞானம் உள்ள ஜந்து.

கரடியை அழையாவிட்டால் கோபித்துக் கொள்ளும். வித்தை பண்ணிப் பிள்ளைகளையும் பெரியோரையும் சந்தோஷப் படுத்தும். அது இரண்டு காலால் நடப்பதைப் பார்த்து அழுத குழந்தையும் வாய் மூடும்.

நரி உபசாரவார்த்தை பேசுவதில் வல்லவன் என்று அதன் கையில் ஓலை கொடுத்து அனுப்பினார்கள். யானை குதிரை ஒட்டை முதல் முயல், அணில்வரை சகல பிராணிகளுக்கும் நரி நல்ல மனதுடன் மண ஓலை காட்டிவந்தது.

கல்யாண நாளில் விருந்தாளிகள் வந்து கூடினார்கள். சுகுணனும் குணபூஷணியும் மலர்ந்த முகத்துடன் எல்லாருடனும் பேசினார்கள். பன்றி மாத்திரம் கல்யாணத்துக்குபோகவில்லை.

கல்யாணம் நிறைவேறினது. வந்த பெரியோர் எல்லாரும் ஆசீர்வாதம் சொன்னார்கள். விருந்துசாலை வெகு விநோதமா யிருந்தது. அவரவர் ஜாதி ஆசாரப்படி சாப்பிட்டார்கள்.

யானைக்கு வாழைத்தண்டும் பலாப்பழமும் குவியலாகப் போட்டிருந்தது. குதிரைக்கு அருகன் புல்லும், கொள்ளுப் பயரும் வேண்டிய மட்டும் போட்டிருந்தது. ஒரு பக்கம் வாழைப் பழம் குவித்துக் கிடந்தது. ஒட்டைக்கு ஒரு பெரிய வேப்ப மரத்தைக் கொடுத்திருந்தது.

ஆடுகளுக்கு அகத்தி இலையும், மாடுகளுக்கு மத்தங்காப்புல்லும் எள்ளுப் பிண்ணுக்கும் தவிடும் வேண்டியமட்டும் போட்டிருந்தது. கழுதைக்குக் காய்ந்த புல். குரங்கு இளநீரும் புளியங்காயும் நாகப்பழமும் சாப்பிட்டது. நான் சற்று தூரத்தில் நின்று பார்த்ததால் விருந்தைப்பற்றி இன்னும் சில குறிப்புகள் கவனிக்க முடியவில்லை.

சாப்பிட்டபின் வெகுநேரமாய் பாட்டுக் கச்சேரியும், விகடகவி வேடிக்கைகளும் நடந்தது. வீட்டுக்குப் போகும் தருணம் எல்லா மிருகங்களும் வெகு சமாதானமாய்ப் பேசிக் கொண்டே போயின. ஆனுல் மறுநாளில் கழுதையில் பாதி உடலும் எலும்புகளும் ஒரு புதரில் கிடந்தது. அப்போது குணபூஷணி சுகுணன் பேச்சைக் கேளாததற்காக விசனப் பட்டாள். இது யார்செய்த மோசம்?

"தீயாரைக் காண்பதுவும் தீதே"

---

வினு :

1. குணபூஷணி, சுகுணன் என்பது யார்?
2. மான் வீடு எங்கேயிருந்தது.
3. யாருக்குக் கல்யாணம் நடந்தது.
4. கல்யாண விருந்து எப்படி நடந்தது.



# 9. கிருஷிகனின் தோழர்

தென்னுட்டில் வாசுதேவ நல்லூர் என்று ஓர் அழகிய கிராமம் உண்டு. அதின் ஒரு பக்கம் மதில்போல் உயர்ந்து வானத்தை எட்டிப் பிடிக்கும் மலைகளும் அடுத்த பக்கம் சலசல வென்ற இனிய கீதத்துடன் ஓடும் சிற்ருறும் இருக்கின்றன. மலைமேல் அடர்த்தியாய் வளரும் மரங்களும் மூங்கில் பண்ணைகளும் மேகங்களுக்கு இருப்பிடமாகும். ஒரு சமயம் மூங்கில் பண்ணைகள் நெருப்புப் பற்றி வெகுதூரம் வரையில் தீவட்டி வெளிச்சம் போடும்.

ஆற்றை நம்பி ஏற்பட்ட வயல்களும் வாழைத் தோட்டங்களும் கொடிக்கால்களும் ஊரைச் சுற்றிலும் காணலாம்.

வாசுதேவ நல்லூரில் முத்துப் பிள்ளை என்று ஒரு சீமான் இருந்தான். அவனுக்கு ஒரு சிறப்பான தோட்டம் இருந்தது. அவனுடைய நாலு மக்களில் பெரியவன் பெயர் சிங்காரம். அவன் தினமும் பாடசாலை முடிந்தவுடனே தோட்டத்தில் வேலை கற்றுக்கொள்ளுவான். முத்துப் பிள்ளை பயிரிடும் சாஸ்திரம் தெரிந்தவன். சிங்காரத்துக்கு வயது 12.

ஒருநாள் சிங்காரம் வேலை செய்து களைப்படைந்தவனுய் இளைப்பாற விரும்பினுன். செடி

களுக்கெல்லாம் தண்ணீர் பாய்ந்தாயிற்று. கரும்புத் தோட்டத்தில் உரம் போட்டாயிற்று. புகையிலை கணு ஒடிக்கிறவேலையும் கொஞ்சம் செய்தான். கிணற்றண்டையில் இருந்த ஒரு பெரிய பூவரசு நிழலில் தன் மேல்துண்டை விரித்து மல்லாந்து படுத்துக் கொண்டான். "இந்த மண்ணில் எவ்வளவு வேலை செய்கிறேன். எனக்கு உதவி செய்ப ஒருவருமே இல்லை" என்று மெதுவாய்ச் சொன்னுன். அவனுடைய தம்பிமார் மூவரும் சிறு பிள்ளைகள் என்பது சிங்காரத்தின் கருத்து.

உடனே பூமிக்குள்ளிருந்து மெல்லிய சத்தம் ஒன்று கேட்டது. பேசுகிறது யார் என்று அவனுக்குப் புலப்படவில்லை. ஒரு கத்தரிச் செடியின் அடியிலிருந்து ஒரு சிறு புழு பேசினது. அது என்ன சொல்லுகிறதென்று கவனித்தான். "ஐயா, நான் தங்களுக்காக உழைக்கிறேன். அதனுல் நான் தங்களுடைய சிநேகிதன் என்று புழு சொன்னது."

சிங்காரம் — ஆஹா, மண்ணில் கிடந்து வயிற்ருல் நகர்ந்து கிடக்கிற புழு நீ, உன் உடம்பில் சிவப்பு இரத்தம் கிடையாது. நீயா என் தோழன்! என்ருன்.

புழு — எனக்குப் பொய் பேசவும் பெருமை பேசவும் தெரியாது. நான் ஒரு சிறிய

வேலைக்காரன். நான் மண்ணை உழுது உழுது மெதுவாக்கி வைக்கிறேன். வேர் அதில் சுலபமாய் இறங்கிச் செடிகள் நன்றாய் வளருகின்றன.



சிங்காரம் — நீ ஒரு அற்பப் புழு......

புழு — என்னை அற்பன் என்று சொல்லுவது தகுதி அல்ல. தமது வேலையைச் செய்கிறவர்கள் அற்பர்கள் அல்ல. நமஸ்காரம் என்று சொல்லித் தலையைப் பூமிக்குள் இழுத்துக்கொண்டது.

அந்தச் சமயம் மரங்கொத்திப் பறவை ஒன்று ஐயா, ஐயா, என்று கூப்பிட்டது. அவன் மேலே பார்த்தபோது அது கொண்டையை இப்படி அப்படிச் சாய்த்துக்கொண்டு இருந்தது. சிங்காரம் கோபமாயிருந்த படியால் அதன் அழகைக் கவனிக்கவில்லை.

**சிங்காரம்** — மரங்கொத்தி, ஏன் கூப்பிட்டாய்?

**பக்ஷி** — ஐயா நானும் உங்களுடைய ஊழியன்.

**சிங்** — எப்படி நீ எனக்கு ஊழியன்! என்ன சம்பளம்?

**பக்ஷி** — வயிற்றுச் சாப்பாடும் வாடகை இல்லாத வீடுமே என்கூலி; ஆனாலும் நான் உங்களுக்கு உபகாரம் செய்கிறேன்.

**சிங்** — என்ன உபகாரம்?

**பக்ஷி** — உங்கள் பயிருக்குக் கெடுதி உண்டாக்கும் புழு பூச்சிகளை நான் சாப்பிடுகிறேன்.

**சிங்** — இதுதான் உன்னுடைய பெரிய உபகாரமா? உன்னுடைய அலகு ஏன் இப்படித் தீட்டிவைத்த பென்சல் மாதிரி இருக்கிறது? உன்னால் என்ன வேலை செய்ய முடியும் என்று சொல்லிச் சிரித்தான்.

**பக்ஷி** — நகைப்பு உடலுக்கு இன்பம். என் அலகு என்னுடைய ஆயுதம்.

சிங் — புழு எனக்கு உதவி செய்வதாய் சொன்னது. நீ அதைக் கொல்லுவதாய் சொன்னாய்.

பக்ஷி — கேள்விப்பட்ட சங்கதியை நேரில் பார்த்து ஆராய்ந்து காரியங்களை அறிந்து கொள்ளுங்கள்! என்று சொல்லிப்பறந்து போய்விட்டது.

இச்சமயம் ஆடு ஒன்று மேமே என்று கத்திக்கொண்டு எதிரில் வந்தது. அதோடு ஒரு பசுவும் வந்தது.

சிங்—நீங்கள்கூட எனக்கு உதவி செய்கிறீர்களா?

ஆடு — ஐயா நான் புல்லை உண்டு உரம் கொடுக்கிறேன். பூமியிலிருந்து கத்தரிச் செடி கஷ்டத்தோடு எடுக்கவேண்டிய உணவு எனது சாணியில் இருக்கிறது.

சிங் — பூமியில் உள்ள சாரம் எப்படி உன்னுடைய சாணிக்கு வந்து விட்டது? பொய் சொல்லுகிறாயா?

ஆடு — ஐயா, பொய் சொல்லுவது மனுஷனுக்கு ஏற்பட்ட குணம். ஆடு பொய் பேசாது. புல் பூமியிலிருந்து எடுத்த ஆகாரத்தை நான் சாப்பிட்டு அதில் ஒரு பாகத்தை உம்முடைய செடிகளுக்குக் கொடுக்கிறேன்.

சிங் — பசுவே, இங்கேவா.

பசு அம்ம்ம்மா, அம்ம்ம்மா, என்று கத்திக் கொண்டு வந்தது.

சிங் — நீ என்ன உதவி செய்கிறாய்?

பசு — நான் செய்கிற ஊழியம் தெரியாதா?

சிங் — தெரியும், தெரியும் சாணி கொடுக்கிறாய். இந்த வருஷம் சோளப் பயிர் கருப்பாய் வளருவது உன்னுடைய உதவியாலும் ஆட்டுமந்தையின் சகாயத்தாலும் என்பது நிச்சயம். மேலும் உழவுமாடு, கவலைமாடு எல்லாம் உன் மக்களே. போய்வா உனக்காகவும், ஆடுகளுக்காகவும் காட்டில் ஒரு பக்கம் புல் விதைத்து நல்ல சாப்பாடு கொடுக்கிறேன்.

பசு — ஐயா அப்படி செய்யுங்கள். என்னுடைய மக்கள் உங்களிடம் வாய்திறந்து கேட்கமாட்டார்கள்: தீனி அதிகம் கொடுத்தால் வேலை அதிகம் செய்வார்கள்.

பசுவும் ஆடும் போய்விட்டபின் சிங்காரம் கிருஷிகனின் தோழர் பலரையும் நினைத்துக் கொண்டே சந்தோஷமாய் வேலை செய்தான். இதற்கு முன் பயிர் விளைந்தகாலத்தில் களவு செய்ய வரும் சிட்டு, கிளி, புரு முதலிய பறவை

களையே அறிவான். இதன் பின்பு பயிருக்கு உபகாரமாய் பூச்சி புழுக்களைக் கொல்லும் பக்ஷி ஜாதிகளையும் கவனித்து அறிந்து கொண்டான்.

---

வினா :

1. கிருஷிகனுக்கு உதவி செய்கிறது யார்?
2. என்ன உதவி செய்கிறார்கள்?
3. அவன் வேலைக்குக் கெடுதி செய்கிறது யார்!
4. உன் சிறு தோட்டத்தில் நீ கவனித்த விரோதிகள் யார்? சிநேகிதர் யார்?
5. பசு பயிர்களுக்கு என்ன உதவி செய்கிறது?



# 10. இலக்கண பாடம் - II

(இது ஒரேநாள் பாட மல்ல.)

**பெயர்ச் சொல் வகைகள் :**

1. பொருள்களின் பெயர்.

கல், பெட்டி, மாடு, மரம், நெல், ரூபாய், வண்டி, சூரியன்.

2. இடங்களின் பெயர்.

மதுரை, பாடசாலை, இந்தியா, வீதி, மலை, காடு, கடல்.

3. காலங்களின் பெயர்.

பகல், மணி, நாள், வருஷம்.

4. ஏதாவது பொருளின் ஒரு **பாகத்தின்** பெயர். இதைச் சினைப் பெயர் என்போம்.

கை, கால், பூ, கூரை, சுவர், வேர், பட்டை, தந்தம், தோல்.

5. தன்மை அல்லது **குணத்தின்** பெயர்.

இதைப் பண்புப் பெயர் என்போம்.

கோபம், அன்பு, அழகு, இனிமை, சிறுமை, பெருமை, தவிப்பு, வெறுப்பு.

6. தொழில் அல்லது **செய்கையின்** பெயர். இது தொழில் பெயர்.

படித்தல், பாடுதல், சிரித்தல், அழுகை.

ஆகவே பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என ஆறுவகைப் பெயர்ச் சொல் உண்டு.

---

**வினு, வேலே :**

1. எத்தனை விதமான பெயர்ச்சொல் இருக்கிறது?

2. வகைக்குப் பத்து உதாரணம் எழுது.

3. உன் உதாரணங்களை வாக்கியங்களில் அமைத்து எழுது.






# 11. ரெயில்வண்டி – ஜார்ஜ் ஸ்டீவென்ஸன்

ஒருநாள் வேலாயுதம் என்னும் பைய னும் ராமசாமி என்னும் சாஸ்திரப் பண்டி தரும் ரெயில்வண்டி ஏறி மதுரைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். வேலு பெருநாளியி லிருந்து மதுரை பார்க்கப் போகிறான். ராம சாமி சாஸ்திரியார் ராமேஸ்வரத்திலிருந்து ஏதோ காரியமாய் மதுரைக்குப் போகிறார். ரெயில்வண்டி ஓட்டும் விதத்தை ஆதியில் எப் படிக்கண்டுபிடித்தார் என்று கேட்டதின்பேரில் சாஸ்திரியார் அவனுக்கு அந்த வரலாறு சொல்லுகிறார்.

"இங்கிலாந்து தேசத்தில் நிலக்கரி வெட் டும் வேலையாள் ஒருவன் சுமார் **150** வருஷங் களுக்கு முன் இருந்தான். அவனுக்கு **1781**-ம்

வருஷத்தில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு ஜார்ஜ் ஸ்டீவென்ஸன் என்று பெயர் இட்டார்கள். தகப்பன் எளியவ ஞனபடியால், ஜார்ஜ் சிறிய பையனுய் இருக் கும்பொழுதே, வாரம் இரண்டு அணு கூலிக்கு வேலையாளாக அமர்ந்தான். வளர்ந்த பிறகு அவனும் நிலக்கரி வெட்டும் வேலை செய்தான். வாசிக்க சாவகாசம் கிடைக்கவில்லை. 18 வயது ஆன பின்பு இரவுப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து புஸ்தகம் வாசிக்கத் தெரிந்து கொண்டான்.

அவன் வேலை செய்த நிலக்கரிக் கேணி களில் நீராவி யந்திரங்கள் வைத்துத் தண்ணீர் இறைத்தார்கள்: நிலக்கரியை மேலே ஏற்று வார்கள். நீராவி யந்திரம் இப்படி வித்தை பண்ணுவதை ஓயாமல் கவனித்து அவன் ஆனந்தமடைவான்.''

வேலு: ஸ்வாமி அந்தமாதிரி யந்திரங்கள் நான் மதுரையில் பார்க்கமுடியுமா?

**சாஸ்திரியார்:** ஆஹா எத்தனையோ. ஜார்ஜ் ஸ்டீவென்ஸன் சிறிதுகாலத்தில் யந்தி ரங்களைக் கவனிக்கும் வேலையாள் ஆனன். அது அவனுக்குப் பிரியமான தொழில். யந்திரங் களைத் துடைப்பதும் எண்ணெய் போடுவதும், கழற்றிப் பொருத்துவதும் அவனுக்குப் பிரி யம். சில சமயம் தானே சிறு யந்திரங்களும் செய்து பார்ப்பான்.

ஒரு சமயம் அங்கே ஒரு கேணியில் வேலை செய்த ஒரு நல்ல யந்திரம் கெட்டுப் போகவே, வேலை நிறுத்திக் கிடந்தது. என்ஜினீர்களெல்லாம் வந்தும் அதைச் சரிபண்ண முடியவில்லை. ஸ்டீவென்ஸன் கேட்டுக்கொண்டதின் பேரில் அவனுக்கு அந்த வேலையைக் கொடுத்தார்கள்: வெகு சுலபமாய் பழுது பார்த்து யந்திரம் பழையபடி வேலைசெய்யப் பண்ணினான். கேணியின் முதலாளிமாருக்கு ஏற்பட்ட சந்தோஷம் அளவற்றது. ஸ்டீவென்ஸன் அப்புறம் கூலியாளாக இருக்கவில்லை. அவனது புகழ் எங்கும் பரவினது.

அவனுடைய காலம் விசேஷமான காலம். நூல் நூற்கவும், நெய்யவும், இரும்பு வேலை செய்யவும் நீராவி யந்திரங்கள் வேலை செய்தன. ஏராளமான சாமான்கள் தினமும் செய்து முடித்தபடியால் அந்த சாமான்களைக் கொண்டுபோக குதிரை வண்டியும் போதாது, படகுகளும் போதாது என்று எல்லாரும் யோசித்தார்கள். ஆனால் நூற்றுக்கணக்கான குதிரைவண்டிகளும் படகுகளும் சேர்ந்து முடிக்காத வேலையை, நீராவி யந்திரம் ஒன்று முடிக்



கும் உடாயத்தை ஜார்ஜ் ஸ்டீவென்ஸன் கண்டு பிடித்தான். அவனே பட்டணவாஸம் இன்ன தென்று அறியாதவன். நிலக்கரிக் கேணிகள் அருகில் தன் காலமெல்லாம் போக்கினவன்.

நீராவிசக்தி பாரம் எவ்வளவானுலும் தூக்குகிறது; ராட்டுச் சுற்றுகிறது; படகு ஓட்டுகிறது; என் வண்டி இழுத்துக்கொண்டு ஓடாது? என்று யோசனை பண்ணினுன். அவன் கையில் பணம் இல்லை. எந்த வேலைக் கும் பொருள் வேண்டுமே.

நிலக்கரிக் கேணிகளில் நெருப்புப் பிடித் துப் பெரிய அபாயம் நேரிடுவது உண்டு. அப்படி ஆகாதபடிக்கு, அங்கே உபயோகிக்கப் புதுமாதிரி விளக்கு ஒன்று கண்டு பிடித்தான். கேணி வேலைக்காரர் அதற்காகச் சந்தோஷப் பட்டு அவனுக்கு ஆயிரம் பவுன் சேகரித் துக் கொடுத்தார்கள். அந்த ஆயிரம் பவுனை யும் உபயோகித்து, வண்டி இழுத்துக் கொண்டு தண்டவாளத்தின்மேல் ஓடும் நீராவி யந்திரம் ஒன்று செய்து முடித்தான். அது தண்டவாளத்தின்மேல் மூன்று மணி நேரத் தில் ஒன்பது மைல் ஓடினது. இது அவனுக்கு நிகர் இல்லாத சந்தோஷமா யிருந்தது. யந்தி ரத்தில் குற்றங்குறை இருந்தாலும் அவற்றைச் சரிபண்ணி விடலாம் என்று மனதைத் தைரி

யம் பண்ணிக்கொண்டான். "காணி குத்தின பின்பு கப்பி குத்தப் பயமா?"

**வேலு** — ஸ்வாமி 18 வயதில் வாசிக்கப் பழகின மனுஷனுக்கு இவ்வளவு கணக்கு எப்படி வந்தது?

**சாஸ்திரியார்**—அது நல்ல கேள்வி. ஜார்ஜ் ஸ்டீவென்ஸனுக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெரிய கலாசாலைகளில் படித்து வந்து தன் பிதாவுக்குக் கணித நூல் போதித்தான். பிளான் வரையக் கற்றுக்கொடுத்தான். மேலும் கடைசியாகச் செய்த பழுதற்ற யந்திரத்தை இருவரும் சேர்ந்து முடித்தார்கள். கணிதநூல் கற்கும் காலத்தில் தகப்பனுக்கு வயது 33.

**1825**-ம் வருஷம் **29** வண்டி சேர்த்த ஒரு வண்டித் தொடரை அவனுடைய யந்திரம் இழுத்துக்கொண்டு 3 மணி நேரத்தில் பன்னிரண்டு மைல் அதிக ஆச்சரியமாய் ஓடினது. ராஜாங்க அதிகாரிகள், லக்ஷாதிபதிகள், சாஸ்திரிகள் பலர் அதில் பிரயாணம் செய்தார்கள். சில வண்டிகளில் சாமான் சரக்குகள் ஏற்றியிருந்தது.

வேடிக்கை பார்க்கத் தேசமே திரண்டு வந்தது. ஜார்ஜ் ஸ்டீவென்ஸன் மகா சீமானாய்த் தன் பிந்திய காலத்தை முடித்தான்.

1830-ம் வருஷத்திற்குள் ரெயில்வண்டி மிகவும் மேன்மையான ஒரு சாதனமாகிவிட்டது. ஆதியில் ரெயில் வண்டியே ஆகாது என்று முறையிட்டு ஸ்டீவென்ஸனுக்கு இடையூறு பண்ணின எல்லோரும் ரெயில்வண்டி எங்கள் நாட்டுக்கு வேண்டும்; இன்னும் வேண்டும், கொடுத்தது காணாது என்று ஆவலுடன் கேட்டார்கள் என்றார். வேலு அவருக்கு நமஸ்காரம் பண்ணினான்.

---

வினா :

1. ஜார்ஜ் ஸ்டீவென்ஸன் கதை எழுது.
2. ரெயில் வண்டியின் பிரயோசனத்தைப்பற்றி எழுது.
3. எத்தனை விதமான வண்டித்தொடர்கள் பார்த்தாய் ?
4. பெயர்சொல் வகைக்கு 2 எழுது.
5. வினைச்சொல் வகைக்கு 2 எழுது.



# 12. நாய்

என்னுடைய நாய் பார். இதின் பெயர் குப்பன். நானும் என் தம்பியும் ஜானகியும் குப்பன்மேல் பிரியமாய் இருக்கிறோம். ஒரு நாள் ஒரு திருடன் இரவில் எங்கள் வீட்டிற்கு வந்தான். குப்பன் அவன்மேல் பாய்ந்து உரக்கக் குலைத்தது. திருடன் பயந்து கையிலிருந்த கத்தியையும் கீழே போட்டுவிட்டு ஓடிப் போனான். அம்மா விழித்து அப்பாவை எழுப்பினாள். அப்பா விளக்கை எடுத்துக்கொண்டு வெளியே போய்ப் பார்த்தார். குப்பன் இன்னும் திருடன் ஓடிப்போன திசையை நோக்கிக் குலைத்துக் கொண்டே இருந்தது. மனிதனுடைய கால் தடம் தரையில் காணப்பட்டது.

குப்பன்மேல் பெரிய காயம் இருந்தது. அதிலிருந்து இரத்தம் ஒழுகினது. ஆகிலும்

அப்பாவைக் கண்டவுடனே வாலை ஆட்டிச் சந்தோஷத்தைக் காட்டினது. ஜானகி அதற்குக் காயம் கட்டினாள்; சிலநாட்களில் காயம் ஆறிற்று.

பொழுது விடிந்தவுடனே அப்பா கத்தியை எடுத்துப் போலிஸ் அதிகாரிகளிடம் கொடுத்து சங்கதி எல்லாம் தெரியப் படுத்தினார். உடனே சப் இன்ஸ்பெக்டர் ராமையர் இரண்டு சேவகரை அனுப்பி அயல் கிராமங்களில் திருடனைத் தேடச் சொன்னார். பழைய திருடருடைய ஜாபிதா ராமையரிடம் இருந்தது. சேவகர் திரும்பிவந்து காளிமுத்து என்னும் ஒரு மனிதன்மேல் சந்தேகம் இருப்பதாய் சொன்னார்கள்.

ராமையர் காளிமுத்தைப் பார்க்கப்போனார். அவன் ஜுரத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டு படுத்திருந்தான். அவனுடைய வலது கையிலும் இடது காலிலும் கட்டுப் போட்டிருந்தது.

**ராமையர்** — அவனைப் பார்த்து "காளிமுத்து, ஏன் படுத்திருக்கிறாய்" என்றார்.

**காளிமுத்து** — ஸ்வாமி தலைவலி பொறுக்கக் கூடவில்லை என்றான்.

**ராமையர்** — அடே, காலில் என்ன?

**காளி** — நரம்புச் சிலந்தி. அந்த நோவி ஞல் ஜுரமும் இருக்கிறது என்று கீழே பார்த் தபடியே சொன்னுன்.

**ராமையர்** — காயத்தைக் காட்டு, பார்க்க லாம்.

காளி பலமான இரண்டு காயம் காட் டினுன். அவனுடைய கந்தல் வேஷ்டியில் நாயின் பல் பட்ட கிழிவுகள் இருந்தன.

**ராமையர்** — உள்ளதை இப்போ வெளி யிடு. எப்படி இந்தக் காயம் சம்பாதித்தாய்?

**காளி** — எஜமான்களே, நான் ஏழை. என்னைக் காப்பாற்ற வேண்டும். நான் ஏதும் அறியேன்.

ராமையர் கத்தியைக் காட்டி "இது யாரு டைய கத்தி?" என்ருர்.

**காளி** — நான் அறியேன்.

இச்சமயம் அப்பாவும் குப்பனும் அங்கே போய் சேர்ந்தார்கள். குப்பன் காளிமுத்தைக் கண்டவுடனே கோபத்தோடு அவனைக் குலேத் துக் கடிக்கப் போனது.

காளிமுத்து ராமையர் காலில் விழுந்து, ஐயா, என்னுடைய நிர்ப்பந்தம் பாருங்கள். என்னை போலீஸார் ஒருதரம் அநியாயக் குற்

றங்கள் சாட்டி ஜெயிலில் மூன்றுமாதம் வைத்தார்கள். அதற்குப் பிறகு எனக்கு வேலை கிடைக்கிறதே இல்லை. என்ன செய்வேன் என்று அழுதான். ராமையர் நல்லவர். அவனுக்கு மன்னிப்புக் கொடுத்து, போலிஸ் ஸ்டேஷனில் தோட்ட வேலையும் வாங்கிக் கொடுத்தார். பின்பு அவன் திருடுகிறதில்லை.

நாங்கள் எல்லாரும் கூடி குப்பனுக்கு ஒரு கழுத்துப்பட்டை செய்து அதில் சலங்கை கட்டி அதின் கழுத்தில் போட்டோம். குப்பன் வாலை ஆட்டினது.



## 13. நிறங்களின் அற்புதம்

எனக்குச் சித்திரம் எழுதுவதில் பிரியம் அதிகம். அதற்காக சப்பாத்துக்கள்ளிப் பழத்திலிருந்து சிவப்பு சாயமும், மஞ்சளிலிருந்து மஞ்சள் சாயமும், எடுத்து சாயம் பூசி விளையாடுவது வழக்கம். மற்ற சாயங்களும் எங்கே கிடைக்கும் என்று தேடி அலைவேன். இதையெல்லாம் பார்த்து எங்கள் துரைமாமா பெங்களூரிலிருந்து ஒரு அழகான சாயப்பெட்டி வாங்கி வந்தார்.

பெட்டி பார்க்க வெகு சிங்காரமாய் இருந்தது. பளபளப்பாய் சாயம்பூசி சிறுவன் ஒரு

வன் சித்திரம் எழுதிக்கொண்டிருக்கும் பாவனை யாய் ஒரு படமும் அதின்மேல் இருந்தது. நான் அதை லீலா, எல்லம்மாள், கண்ணன், கருப்பன் ராமன் லக்ஷ்மணன் ஆக எல்லா ருக்கும் காட்டினேன். எப்போ கொஞ்சம் சாவ காசம் கிடைத்தாலும் சித்திரம் எழுதுவதும் சாயம் பூசுவதுமாய் அந்த நேரத்தைச் செல விடுவேன். அம்மை அந்தச் சித்திரங்களைக் கண்டு உள்ளம் பூரிப்பாள். அப்பா அதிலுள்ள குற்றங்களைக் காட்டி எப்படிச் செய்யவேண்டும் என்றும் சொல்வார். வேதவல்லி, யார் இங்கே சாயத்தைச் சிந்தினார்கள்? என்று கேட்பாள்.









பெட்டிக்குள் சிவப்பு, ஊதா, நீலம், பச்சை மஞ்சள், வெள்ளை, கருமை நிறச் சாயங்கள் செங்கல் வடிவமான சிறு கட்டிகளாய் இருந் தன. அவற்றைத் தொடுவதே எனக்கு ஆநந்

தம். அதனுல் தூங்கப் போனுலும் கூட என் சாயப் பெட்டியைத் தலையணை அண்டையில் வைத்துக் கொள்வேன். அது ஜெர்மனி தேசத்திலிருந்து வந்தது. நமது தேசத்தில் செய்யப்பட்டதல்ல.

ஒரு அங்குல நீளம், அரை அங்குல அகலம், கால் அங்குல கனமாய், ஒவ்வொன்றும் ஒரு சிறிய தனி அறையில் வைக்கப்பட்டு இருந்தது. எல்லாக் கட்டிகளும் கறுத்து இருண்ட நிறத்தில் காணப்பட்டன. தண்ணீர் போட்டுக் கரைத்தபோது மனதை மயக்கும் சுயரூபம் தெரியவந்தது. இந்த விஷயங்கள் என்மனதை விட்டு நீங்கவேயில்லை.

ஒருநாள் பகல் சாப்பாடு முடிந்தவுடனே கட்டிலில் சற்றுநேரம் படுத்திருந்தேன். சாயப் பெட்டி என் அருகில் இருந்தது. அதில் இருந்த சாயக்கட்டிகள் பேச ஆரம்பித்தன.

“ஓ சாயங்களே, நான் உங்களெல்லாரிலும் அழகன்.” இப்படிப் பேசினது யார் என்று நான் யோசனை பண்ணுகையில் “அப்பா அழகா! தன்னைத்தான் புகழ்வது அழகைக் கெடுக்கும். இதை மறவாதே” என்று பச்சை சொன்னது.

“எந்த சுபகாரியத்திற்கும் வேண்டிய வரு ணம் நானிருக்க நீங்கள் கூச்சல் போடு

வானேன். கல்யாணத்திலும் கார்த்திகையிலும் திருநாள் பெருநாளிலும் மஞ்சளையும் மஞ்சள் வருணத்தையும் அல்லவோ மனுஷர் தேடுகிறார்கள். என்றாலும் என் பெருமையை நானே சொல்லிக்கொள்ள எனக்குப் பிரியமில்லை’’ என்று மஞ்சள் சொன்னது.

“இது என்ன கோரணி! இந்த மஞ்சளும் சிவப்பும் பட்டிக்காட்டுத் தனமாய் பேசுகின்றன. சிவப்பு மோசத்திற்கு அடையாளம். மஞ்சள் நிறம் கீழே விழுந்துபோகும் இலைகளுக்குரியது. பச்சை காடுமேடெல்லாம் கிடக்கிறது. நானோ உயர ஆகாசத்திலும் பொருந்தியிருக்கிறேன். தாழ்ந்த கடல்களிலும் நானே பரவியிருக்கிறேன். எனக்கு நிகர் யார்?’’ என்று நீலம் முரட்டுத்தனமாய் கூச்சலிட்டது.

இனிமேல் எந்த வருணம் பேசுமோ என்று காத்து இருந்தேன். கருப்பு பேசுமென்று நான் நினைக்கவில்லை. திடீரென்று “ஹோ, யார் பேசுகிறது, கடவுள் நிறம் சிவப்பு, மஞ்சள் அல்ல. கரியநிறம், என்ற சத்தம் அங்கே அசரீரி வாக்குமாதிரி கேட்டது. மறுபடியும், ‘கண்ணின் கரு விழி என்ன நிறம்’ என்று சொல்லி உரக்கச் சிரித்தது. மற்ற வருணங்களுக்கெல்லாம் ஆச்சரியம் உண்டானது. மெய்தான். கருப்பு மாயத்தைக் குறிக்

கும் நிறம். யாரும் அதைக் கண்டு அஞ்சுவது வழக்கம்.

வெள்ளைமட்டும் அங்கே பேசவில்லை. வெள்ளை சகல வருணங்களையும் அடக்கியிருக்கிறது. சமாதானத்துக்கும் பரிசுத்தத்திற்கும் வெண்ணிறம் அடையாளம். தானே தன்னைப் புகழ்தல் தவறு என்றெண்ணி தன்னைக்குறித்து அது ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அதனால் எல்லா வருணங்களும் வெள்ளையினிடத்தில் போய் தங்கள் வழக்கைத் தீர்க்கும்படி கேட்டுக் கொண்டன. வெள்ளை அவைகளையெல்லாம் அழைத்துக்கொண்டு வெளியே போனது.

தோட்டத்திற்குள் போனவுடனே எல்லா நிறங்களுக்கும் நல்ல குணம் வந்து விட்டது போலத் தோன்றிற்று. அவை ஒன்றும் அப்புறம் வாய் திறக்கவில்லை. வெள்ளை மென்மொழி கூறிப் பேசினது.

"கருப்பு மலைமேல் தூய வெண்மையான மேகம் படுத்திருக்கிறது. மலையின் இருண்ட பள்ளத்தாக்கில் பச்சை இலை பரப்பி ஜோடித்து வைத்திருக்கிறது. இலைகள் நடுவில் பல வருணப் புஷ்பங்கள் கனிகள் பரப்பியிருக்கிறது. தளிர்கள் இலைகள் மலர்கள் கனிகள் தினமும் ஒரு புதிய நிறத்தைப் பெருகிறது. இவை

களில் சகல வருணங்களும் ஒருமித்துக் கூடிக் குலாவி நிற்க, ஒரு சிறு பெட்டிக்குள் கிடந்து கொண்டு நீங்கள் இப்படி முட்டி மோதிக் கொள்வது அழகா?" என்றது.

இத்தருணம் வேதவல்லி பூனை என்மேல் குதித்தது. விழித்துக்கொண்டேன்.



## 14. என் தோட்டம்

1 நலமான தோட்டமிது.
நான் போட்ட தோட்டமிது.
நலமான மரங்களதில்
நாற்புறமும் நட்டு வைத்தேன்.
பலமான மாங்கொட்டை
மண்ணினுள்ளே புதைத்தேனே.
பலவகையாம் விதை தேடிப்
பாத்திகட்டி விதைத்தேனே.

2. மூலையிலே மல்லி மலர்
முகம் பார்த்துச் சிரித்திடுவாள்.
காலையிலே ரோஜாப்பூ
கண் திறந்து பார்த்திடுவாள்.
மாலையிலே மந்தாரை
மனமகிழ மலர்ந்திடுவாள்.
மாலைகட்ட மனமில்லை.
மலரழகைப் பார்த்திருப்பேன்.

தோட்டம் + இது = தோட்டமிது
மரங்கள் + அதில் = மரங்களதில்

# 15. இலக்கணப் பாடம் - III

எழுத்து :

மூன்று வகை

1. உயிர் எழுத்து - 12. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ. இவை எழுத்துக்களுக்கு ஜீவன். அழகான தொனி உள்ளவை.

2. மெய் எழுத்து - 18. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள் ற், ன்.

தனக்குத் தொனி இல்லாத எழுத்து உயிர் எழுத்தோடு சேர்ந்தால்தான் மெய்யெழுத்துக்கு உச்சரிப்பு உண்டு.

3. உயிர் மெய்யெழுத்து - 216.

உயிர் எழுத்தும் மெய் எழுத்தும் கூடி உண்டானவை உயிர்மெய் எழுத்துக்கள். ஒவ்வொரு எழுத்திலும் இரண்டு எழுத்து உண்டு.

உதாரணம் :

| | | |
|---|---|---|
| க் + அ = க | க் + ஆ = கா | க் + ஔ = கௌ |
| ங் + அ = ங | ங் + ஆ = ஙா | ங் + ஔ = ஙௌ |
| ச் + அ = ச | ச் + ஆ = சா | ச் + ஔ = சௌ |
| ட் + அ = ட | ட் + ஆ = டா | |
| ண் + அ = ண | ண + ஆ = ணா | |
| .............. | .............. | .............. |
| ன் + அ = ன | ன் + ஆ = னா | ன் + ஔ = னௌ |

குறிப்பு — மெய் எழுத்துக்களை ஒற்று என்பது வழக்கம்.

வினா :

1. எத்தனை வகை எழுத்து உண்டு?

2. அரசர் இட்டது சட்டம்.
எந்த யானை உயரம்.

இந்த வரிகளில் உள்ள எழுத்துக்களை மேற் சொன்ன மூன்று வகுப்புக்களாய் பிரி.

3. குட மல்லி.

இதில் உள்ள உயிர் மெய் எழுத்துக்களை எடுத்து அவற்றை உயிர், மெய் வெவ்வேறாய் பிரித்துக் காட்டு.



# 16. மைடாஸ் ராஜா கதை

பொருளாசையின் பலன்

பொருள் தேடுவதுமேல் எப்பொழுதும் கருத்தாயிருப்பது நல்ல குணமல்ல. அப்படிப் பணத்தின் மேல் ஆசை வைத்த ஜனங்கள் அதிகக் கஷ்டப்படுவார்கள். இந்த கருத்துக்கு இசைந்த கதை ஒன்று கிரேக்கர் என்ற ஜாதியார் முன்காலத்தில் வழங்கினார்கள்.

முன் காலத்தில் மைடாஸ் என்று ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு பொன்னின் பேரில் பிரியம் அதிகம். பணத்தை எந்த அவசர காரியத்துக்காகவும் செலவிடமாட்டான். அதைச் சேர்த்து வைப்பதே அவனுக்குப் பிரியம்.

கடவுள் அவன் மேல் கிருபை கூர்ந்து அவனுக்குத் தெளிந்தபுத்தி கொடுக்க விருப்ப மாய் இருந்தார். ஒரு தூதனை மைடாஸ் மன்னனிடம் அனுப்பினுர். அரசன் படுக்கை விட் டெழுந்திருக்கும் காலை நேரத்தில் தூதன் பிரகாசத்துடன் தோன்றினுன்.

மைடாஸ் எழுந்து தூதனுக்கு வந்த னம் செய்தான். தூதன் "மைடாஸ் மகாரா ஜாவே, உனக்கு என்னதேவை? நீ கேட்ட தெல்லாம் கொடுக்கும்படியாக மஹாதேவன் என்னை உன்னிடம் அனுப்பினுர்; உன் விருப் பத்தைச் சொல்லு" என்ருன்.

மைடாஸ் மன்னனுக்கு உண்டான சந் தோஷத்திற்கு அளவு கிடையாது. "ஸ்வாமி, எனக்குச் சுவர்ணக் குவியல்கள் வேண்டும்" என்ருன்.

தூதன் அதிசயித்து, "என்ன! உனக்கு இப்போது வேண்டிய அளவு பொன் இல் லையா? வேறு ஏதாவது, பொன்னைவிட மேன் மையான ஆசீர்வாதம் கேள்" என்ருன்.

மைடாஸ் "ஆண்டவனே, பொன் அப்ப லம் உண்டானுல் என்ன அம்பலம் உண்டா காது? பொன்னைவிட மேலான ஆசீர்வாதம் ஒன்றுமே இல்லை" என்ருன்.

தூதன் "முன்னோர்கள் செல்வத்தைப் பெருமையாய் பேசவில்லை. சிறியரே மதிக்கும் செல்வம், என்றார்கள். அதாவது புத்திகெட்டவர்கள்தான் பொன் பேரில் ஆசை கொள்வார்கள் என்று பெரியோர்கள் சொன்னார்கள்" என்றான்.

மைடாவ்ஸ "ஐயனே, நான் தொட்டதெல்லாம் பொன்னாகும்படி எனக்கு வரந்தாரும்" என்றான்.

இதைக் கேட்ட தூதன் ஆச்சரியப்பட்டு, "அப்படியே ஆகுக" என்று சொல்லிப் போய் விட்டான்.

மைடாவ்ஸராஜன் விரும்பியபடியே அவன் தொட்ட எந்தப் பொருளும் பொன்னாகி தகதகவென்று பிரகாசித்தது. சத்தமிட்டுச் சிரித்து, கைதட்டிக் குதித்தான். ஓடி ஓடி வீட்டில் இருந்த மேசை, நாற்காலி, சாப்பிடும் கிண்ணம், குடிக்கும் செம்பு ஆகிய எல்லாப்பொருள்களையும் தொட்டான். எல்லாம் தங்கமாகி கதிர் ஒளி வீசின.

ராஜா சாப்பிட உட்கார்ந்தான். பழம், பால், அப்பம் ஆகிய எல்லாப் பதார்த்தங்களும் பொன் ஆயிற்று; ராஜாவுக்குப் பசியாற வழி வகை ஒன்றும் இல்லை. தவித்தவனாய் கட்டிலைத்தேடிப் படுக்கப்போனான். கட்டில் மெத்தை

எல்லாம் பொன்னுயிற்று. ராஜாவுக்குப் பஞ்சு மெத்தைக்குப் பதில் பொன் மெத்தையும் பொன் தலையணையும் இருந்தது. அரசனது வருத்தத்தைப் பார்த்து ஆறுதல் சொல்ல வந்தராணியும் மகளும் அரசனைத் தொட்டதி ஞல் அவர்களும் பொன்னுகிப் போனுர்கள். அரண்மனை வேலைக்காரர் எல்லாரும் இவைகளைக் கண்டு பயந்து ஓடிப் போனுர்கள்.

ராஜா பொழுது அடைவதற்குள் மிகவும் துக்கமாய் இருந்தான். பசியும் தாகமும் அதிகரித்தது. அவனுக்கு இரங்குவார் ஒருவருமில்லை.

“ஆஹா, தூதனிடம் சாபத்தையா கேட்டு வாங்கினேன்;” என்று அழுதான். உடனே தூதன் அவனுக்கு எதிரில் காணப்பட்டான். மைடாஸ் அவன் பாதத்தில் விழுந்து, “ஐயனே, நான் கேட்டு வாங்கின சாபத்தை என்னை விட்டு நீக்கும்” என்றுன்.

தூதன் “இல்லை, இன்னும் ஒரு மாதமாவது இந்த நல்ல வரம் இருக்கட்டும்” என்றுன்.

மைடாஸ் “ஒரு நிமிஷமாகிலும் வேண்டாம். நான் இனிமேல் வரம் கேட்கமாட்டேன். தேவரீர் கொடுத்த ஆசீர்வாதம்போதும் என்று சொல்லுவேன். ஏழைக்கு இரங்கும்” என்று கெஞ்சினுன். தூதன் “உன் மனம்போல் ஆகுக” என்று சொல்லி மறைந்தான்.

அரசன் பிரியப்படியே பொன்னுக மாறின யாவும் பழைய ரூபத்தை அடைந்தன. ராணியும் ராஜ குமாரியும் உயிர் பெற்ருர்கள்.

தன் பிந்திய காலத்தில் அரசன் புத்தியோடு பிழைத்தான். பொன் மேலும் பணத்தின் மேலும் ஆசையை ஒழித்து தன் செல்வத்தை ஏழைகளுக்குக் கொடுத்தான்.

---

வினு:

1. மைடாஸ் தூதனிடம் கேட்டவரம் என்ன?
2. அந்த வரத்தினுல் வந்த கஷ்டம் என்ன?
3. உனக்கு அந்த வரம் வேண்டுமா?



# 17. குயில்

"அக்கா ஆ ஆ,..........அக்க்கா ஆ ஆ, அக்க்கா ஆ ஆ" சந்தரா, சந்தரா, ஓடிவா, சீக்கிரம் வா, இதோ குயில்! பார், என்ன அழகாய் கூவுகிறது!"

"பாலு, இதுதானு குயில்? காகம்போல் தோன்றுகிறது." தொனி என்ன இனிமையாய் இருக்கிறது!

"தொனி இனிமைதான். குணத்தில் அதிகப் பழுதுண்டு."

"அண்ணு! கெட்ட குணம் மனிதருக்கு மட்டுமே உண்டு என்று நான் நினைத்தேன்."

"பிராணிகளும் வயிறு வளர்க்க வேண்டிப் பாவம் செய்யவில்லையா? மாடு களவு செய்து சாப்பிட தந்திரமாய் நடந்துகொள்ளும். பூனை கண் பார்த்து சமர்த்தாய்த் திருடுகிறது."



"நாய் மற்ற நாய்களைப் பகைத்து சண்டைக்குப் போகிறது. குரங்கு சண்டையிடும். கோழி பார்த்தவுடனே பகைக்கும் குணமுடையது."

"சிங்கம் சண்டையிட்டால் தன் எதிராளியைக் கொன்றுவிடும்."

"குயிலின் தப்பிதங்களையும் மன்னிப்போம் சொல்லு. குயில் என்ன விகடம் பண்ணும்?"

குயில் முட்டை யிடும். ஆனல் அடைகாக்க அதற்குப் பிரியம் கிடையாது. அதனல் வேறு பக்ஷிகளின் கூடுகளில் கூட்டுக்கு ஒன்ருய் இரண்டு கூடுகளில் முட்டையிடும்."

"கூட்டுக்காரப் பக்ஷி அதைக் கண்டு கொள்ளாதா?"

"அதுதான் குயிலின் சமர்த்து. தன் முட்டை நிறமான முட்டையிடும் பக்ஷியின் கூடு தேடி அதில் முட்டையிடும். அந்தப் பக்ஷியின் முட்டையை எடுத்து எங்கேயாகிலும் போட்டுவிடும், அல்லது தானே சாப்பிடும்."

"ஆஹா! என்ன அநியாயம்!"

"குருவி இதை யெல்லாம் அறியாமல் அடைகாக்கும். குஞ்சு பொரித்தவுடனே இன்னும் ஒரு காரியம் பண்ணும். குருவியின் குஞ்சை எடுத்து எங்கேயோ கொண்டுபோய்க் கொன்று விடும்."

"அண்ணு, குயில் ஏன் இப்படிப் படுகொலை செய்யும்?"

"அடைகாத்த பறவையின் குஞ்சு இருக்கு மட்டும் அது இரண்டு குஞ்சுகளுக்கும் உணவு ஊட்டும். அது போய்விட்டால் குயிலின் குஞ்சுக்கு இரட்டைப் பங்கான தீனி கிடைக்குமல்லவா?"

"என்ன தந்திரம்!"

"குயிலின் குஞ்சு வயிறு நிறையத் தின்று கொழுத்துப் பருத்துக் கூடுகொள்ளாத பெரிய குஞ்சாகும். அப்போது அதை வளர்க்கும் குருவிகள் இரண்டும் தம்மைவிடப் பெரியதான குஞ்சுக்கு உணவு ஊட்ட வெகு சிரமத்துடன் குதித்து, பறந்து, படும்பாடு பார்க்க நல்ல வேடிக்கை."

"அண்ணா இது மெய்தானா? யார் இதை யெல்லாம் கவனித்தார்கள்?"

"குயிலை ஆகாயக் கப்பலில் இருந்து கவனித்துப் படமும் எடுக்கிறார்கள். அவர்கள் வார்த்தையை நாம் நம்புவது சரி. வேறு சில ஜனங்கள் ஒளிந்து மரங்களின் கீழ் தங்கியிருந்து இம்மாதிரிக் காரியங்கள் கவனிக்கிறார்கள்."

"நமது பாட்டியார் குயிலைப்பற்றி ஒரு கதை சொன்னாள்."

"என்ன கதை?"

"ஒரு ஊரில் தாய் தந்தை இல்லாத இரண்டு சிறுமிகள் அவர்களுடைய சிறிய தகப்பனிடம் வளர்ந்து வந்தார்கள். ஒருநாள் சிறிய தகப்பன் அவர்களுடைய பணத்தை எல்லாம் எடுத்துக்கொள்ள விரும்பி அவர்களைக் காட்டுக்குக் கொண்டுபோய் விட்டுத் திரும்பினான்.

அது இருண்ட இரவு. காலையில் எழுந்து அவர்கள் அழுது தவித்துப் போன பின்பு அங்கே கிடைத்த காய்கள் பழங்களைச் சாப்பிட்டார்கள். அங்கே யிருந்த ஒரு பெரிய மரப் பொந்தில் மழைக்கும் இரவின் குளிருக்கும் ஒதுங்கி ஜீவித்தார்கள்.

ஒருநாள் காலையில் சிறுபெண் காட்டில் மலர், காய்கனி கொய்யப் போயிருந்த நேரம் ஒரு ராஜகுமாரன் அந்த மரத்தண்டை வந்தான். தனியாய் அங்கிருந்த பெண்ணைத் தன் குதிரையில் ஏற்றித் தன்னுடைய அரண்மனைக்குக் கொண்டுபோய்க் கல்யாணம் செய்து கொண்டான்.

சின்னப் பெண் மரத்தண்டை வந்து அக்காளைத் தேடித் தேடி அலைந்து திரிந்து உடல் மெலிந்து சிறுத்து ஒரு பறவையானாள். அக்கா, அக்கா என்று கூவி அக்காளைத் தேடினாள். அதனால் அவளைக் கண்ட சங்கீதம் தெரிந்த ஒரு பக்ஷி அவளைக் கல்யாணம் செய்தது. பின்பு அவர்கள் இருவரும் அவர்களின் குழந்தைகளும் சேர்ந்து அக்கா, அக்க்கா என்று கூவிப் பெரிய பெண்ணைத் தேடுகிறார்கள். இதுதான் குயிலுக்கு—'அக்காக் குருவி' என்ற பெயர் வந்த காரணம்.

---

**கேள்விகள் :**

1. குயிலுக்கு ஒரு பட்டப்பெயர் சொல்லு.
2. அப்பெயர் வந்த காரணம் என்ன ?
3. குயில் என்ன விஷயத்தில் காகத்தைப்போல் இருக்கிறது.
4. குயில் பிள்ளை வளர்க்கும் உபாயமென்ன ?



# 18. கம்பர் கவிச்சக்கரவர்த்தி – I

ஒளவையார் தமிழ் நாட்டில் கவி பாடின காலத்தில் அங்கே மூன்று ராஜ்யங்கள் இருந்தன என்று முன் ஒருநாள் பேசினோம். சேர, சோழ, பாண்டிய நாடுகள் என்று அவைகள் அழைக்கப்பட்டன. சோழ, சேர ராஜ்யங்களில், ஒளவையார் காலத்தில் கம்பர் என்று ஒரு புகழ்பெற்ற வித்வான் இருந்தார்.

கம்பர் சிறுவனாய் இருக்கும் பொழுதே தகப்பனார் இறந்துபோக, சடையப்பவள்ளல் என்னும் சீமான் ஒருவரால் ஆதரிக்கப்பெற்றார்.

ஒரு நாள் பாடசாலையில் உபாத்தியாயர் தமது கம்புப்பயிர் கொல்லையைக் காக்குமாறு கம்பனை அனுப்பினார். அங்கே கம்பர் அசட்டையாய் இருந்ததினால் அரசனது குதிரை வந்து பயிரை மேய்ந்து விட்டது. உபாத்தி

யாயரும் வந்துவிட்டார். அவருடைய சிக்ஷைக்குப் பயந்து, அயலில் இருந்த காளி கோயிலில் போய் கோவென்று அழுதார். உடனே தேவதை இரங்கி, அவருடைய நாவைத் தொட்டாள். கம்பர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஒரு கவி பாடினார். அதனால் குதிரை செத்துக் கீழே விழுந்தது.

இதைக் கண்ட உபாத்தியாயர் பயந்து நடுங்கியதால், கம்பர் மறுபாடியும் ஒரு கவி பாடி குதிரையை உயிர்ப்பித்தார். இந்தச் செய்தி ராஜாவுக்கு எட்டியது. அன்று முதல் கம்பர் அரசன் தயவு பெற்று ராஜ அரண்மனையில் வசித்துக் கவி பாடித் தினமும் அரசனையும் ராஜ சபையாரையும் சந்தோஷப்படுத்தினார். இப்படி ராஜ சபையில் பாடும் வித்வான்களுக்குச் சமஸ்தான வித்வான்கள் என்று பெயர்.

சோழ ராஜா கம்பரை மிகுந்த அபிமானத்துடன் நடத்திவந்தார். இருவரும் பிரியமான நண்பரானார்கள். கம்பருக்கு அரசனைப்பற்றிய பயம் சிறிதளவும் கிடையாது.

ஒருநாள் ராஜாவுக்கும் கம்பருக்கும் மனஸ்தாபம் உண்டாயிற்று. ராஜா கம்பர் தன் தேசம் விட்டுப் போய்விடவேண்டுமென உத்தரவு கொடுத்தார். கம்பர் அதற்கு மாறுத்தரமாக வேடிக்கை விநோதமாகச் சில கவிகள் சொன்னார். அக் கவிகளின் கருத்துமட்டும் சொல்லு

வோம்: அதாவது, எம்பெருமானே, உம்முடைய தேசம் விட்டால் எனக்கு இருக்க இடம் கிடையாதா, என்னை ஆசையோடு உபசரிக்காத மன்னன் இவ்வுலகில் இருக்கிருனு? என்பதே.

கம்பர் ராஜ கட்டளைப்படியே தனக்கிருந்த சகல பொருட்களையும் கொடுத்துவிட்டு, புறப்பட்டுச் சேர மன்னனிடம் போனுர். போகும் வழியில் வயிற்றுப் பசிதீர பலவித வேலைகளும் செய்து பொருள் சம்பாதித்தார். ஒருநாள் ஒரு மனுஷியின் கொல்லையில் ஒரு மண் சுவர் கட்டிக் கூலி பெற்றுக் கொண்டார். வேறொரு மனுஷிமேல் கவிபாட ஆயிரம் பொன் கூலி பேசி, 500 பொன் வாங்கிக்கொண்டு நாலு வரியில் பாதி இரண்டு வரி எழுதிக் கொடுத்தார்.

உடுத்த வஸ்திரம் இல்லாமல் ராஜ சபைக்கு எப்படிப் போவது என்று யோசனை பண்ணி ஒரு குடியானவனிடத்தில் வேலை செய்தார். அவன் அவருடைய பெருமையை ஒருவாறு கண்டு, அவரைத் தன்னிடம் இருக்கும்படி வருந்திக் கேட்டான். அப்படி இருக்கச் சம்மதியாமல் இரண்டு சிறு வேஷ்டிகள் பெற்று, ஒரு வேலைக்காரனைப்போல் உடுத்திக் கொண்டு சேர மன்னனிடம் போனுர்.

சேர ராஜனிடம் தான் கம்பருடைய ஊழியன் என்று சொல்லி ஒரு அற்பமான ஏவல்காரனுக அமர்ந்தார். அங்கு உள்ள யாவரும் ராஜா

வும் அவரை வயிற்றுப் பிழைப்புக்காக அலை கிற ஒரு பொடியன் என்றே எண்ணினார்கள்.

கம்பர் சோழ ராஜனிடம் இருந்த காலத்தில் எழுதின பல நூல்களில் ராமாயணம் மிகவும் சிறந்தது. நமது பள்ளிக்கூடங்களிலும் வீடுகளிலும் அதை வாசிக்கிறோம். சேரனுடைய அரண்மனையில் உள்ள வித்வான்கள் இரவில் ராமாயணம் வாசித்துப் பிரசங்கிக்கிற வழக்கம் இருந்தது. அப்படிப் பிரசங்கம் நடக்கும்பொழுது கம்பர் தீவட்டி பிடித்து நின்றார். தமது கவிகளை மற்ற வித்வான்கள் எடுத்துப் பிரசங்கிக்க, சில சமயங்களில் எல்லாரும் விநயமாய்க் கேட்கும்போது சிரிப்பார். வேறு சமயங்களில் எல்லாரும் நகைக்கும் போது கம்பர் குத்துக்கல்போல் நிற்பார்.

இவ் விஷயங்களை யெல்லாம் சேரன் கவனித்து, மனதில் தீராச் சந்தேகம் அடைந்து அடைப்பக்காரனிடம் பேசுகிறார்.

**சேரன்** — தீவட்டிக்காரா, இங்கே வா.

**அடைப்பக்காரன்** — ஸ்வாமீ.

**சேரன்** — ராமாயணப் பிரசங்கம் நடக்கும் சமயங்களில் நீ நடந்துகொள்ளும் விதம் கவனித்தோம்.

**அடைப்பக்காரன்** — ஐயனே, நான் கம்பருடைய ஊழியன். அவர் சொல்லுகிற அருத்

தத்திற்கும், இங்கே வித்வான்கள் சொல்லுகிற கருத்துரைக்கும் பேதம் இருக்கிறது.

அரசன் அளவு கடந்த ஆச்சரியப்பட்டு, இவன் மெய்யாய் அடைப்பக்காரனு! என்று சந்தேகித்தார். நீயே கம்பர் சொல்லுகிற வியாக்கியானங்களை எடுத்துக் கூறுவாயா? என்று கேட்டார். கம்பர் அப்படியே சம்மதித்து மகா இனிமையாகச் சொன்னார். உடனே அரசன் "அடைப்பக்காரா, நீ யாரானாலும் சரியே. இன்று முதல் நீ என்னுடைய சமஸ்தான வித்வான்" என்றார். மற்ற வித்வான்கள் இதைக் கேட்டதும் துக்கம் நிறைந்தவரானார்.

உடனே கம்பருக்குக் கழுத்திற்குச் சரப்பளியும் கை விரல்களுக்கு மோதிரமும் போட்டார்கள். பொற்சரிகை வஸ்திரங்கள், சால்வைகள் பட்டாடைகள் கிடைத்தது. அரசரோடு ஆசனத்தில் உட்கார்ந்தார். வித்வான்கள் அதைப் பார்த்து மனம் சோர்ந்து போனார்கள்.

"அடைப்பக்காரனுக்கு வந்த வாழ்வு பார்! இந்தக் கீழ் மகனுக்கும் பைத்தியக்கார ராஜாவுக்கும் தகுந்த ஞானம் புகட்டுவோம்" என்று அவர்கள் பேசிக்கொண்டார்கள். என்ன செய்யலாம் என்று ஆலோசனை பண்ணினார்கள்.





# 19. கம்பர் கவிச்சக்கரவர்த்தி–II

ஒருநாள் புதுவித்வான் அரச சபையில் வீற்றிருக்க, ராஜாவைச் சேவிக்கிற அம்பட்டன் ஓடி வந்து, வித்வானுடைய கழுத்தை இறுகக் கட்டிக்கொண்டு "அண்ணு அண்ணு இத்தனை காலம் எங்கே போனுய்" என்று சொல்லி அழுதான். வெகுநேரம் அழுதபின் "அண்ணு, உன்னைத் தேடாத இடமில்லை. இப்போது உன்னைக் கண்டது தெய்வத்தைக் கண்

டதுபோலவே இருக்கிறது" என்று சொல்லி ஓலமிட்டான். கண்ணீர் தாரை தாரையாய் பெருகினது. கம்பரைக் கட்டிப் பிடித்த பிடியை விடவில்லை.

கம்பர் என்ன செய்தார்?

அம்பட்டனுடைய கண்ணீரைத் தமது மெல்லிய சால்வையால் துடைத்தார். "அப்பன் அழாதே, யாவும் தெய்வசங்கல்பம். வா வீட்டுக்குப் போகலாம்" என்று கனிவாய்ச் சொல்லி, அரசரிடம் பணிந்து விடைபெற்று புறப்பட்டார். அரசர் துக்கமும் அவமானமும் மேலிட்டுத் தமது அறைக்குப் போனர்.

வித்வான் மயிர்வினைஞனேடு வழி நடந்து போகையில் கடையில் இரண்டு சேர் நெய் மிட்டாய் வாங்கிக்கொண்டார். வீடு சேர்ந்தவுடனே அம்பட்டன் மனைவியை ஆசீர்வதித்து, குழந்தைகளை முறைப்படி தழுவி மிட்டாயும் கொடுத்தார். மிகுந்த உறவு பாராட்டினர்.

இரவில் கம்பர் சரஸ்வதியை ஸ்தோத்தரித்து "என் தாயே, ஏழைகளின் புகலிடமே, நீயே என் கதி, நீயே நிலை" என்று சொல்லிக் கண் மூடாது இரவு போக்கினர்.

காலையில் போஜனம் உண்ணு முன்னதாக அம்பட்டனைப் பார்த்து, "அடே தம்பி, நீ

இதுவரை அரசருக்கு வேலைசெய்து பொருள் தேடினாய்! இனி கொஞ்சகாலம் நான் அவ் வேலை செய்கிறேன்'' என்றார். குருட்டுக்கண் இருட்டுக்குப் பயப்படுமோ? அதுபோல அம் பட்டன் யாதும் விசாரமில்லாமல் "ஆஹா அண்ணா, போய் வாருங்கள். உங்கள் மனம் போல் ஆகட்டும்'' என்றான்.

அரசன் இரவெல்லாம் கண் உறக்கமில்லா மல் இருந்து அதிகாலையில் படுக்கை விட்டு எழும்புவதற்கு முன்னமே கம்பர் வந்து எதி ரில் நின்றார். அரசன் யாதும் பேசுமுன்னமே புலவர் "ஐயனே, சவரம் பண்ண வந்திருக்கி றேன். மேலும் நேற்று நானும் என் தம்பியும் தாயாதி பாகம் பகிர்ந்தோம். இதோ இந்தச் சிலம்பு என் பங்கில் கிடைத்தது. இது யாரோ மஹா பிரபு என் பாட்டனுக்கு இனம் கொடுத் தது'' என்று சொல்லி பிரகாசமான கால்சிலம்பு (கொலுசு) ஒன்றை அரசனுக்குக் கொடுத்தார்.

அரசன் நடந்த காரியம் எல்லாம் மறந்து விட்டு சிலம்பைப் பார்த்து அதிசயித்து, "ஆஹா, இதை அணிந்த பாக்கியசாலி யார்! மின்னல் துண்டு மாதிரி என் கண்களை நாணச் செய்கிறதே'' என்றான்.

**கம்பர்** — இதுகூடச் சேர்ந்த மற்றச் சில ம்பு என் தம்பி வசம் இருக்கிறது. ஈன ஜாதி

யாரான எங்களுக்கு இதெல்லாம் என்னத்திற்கு! அடுத்த சிலம்பை அவனிடம் கேட்டு வாங்கி மஹாராணியாரின் பாதத்தில் போட்டால் நல்லது என்றார்.

**ராஜா** — அம்பட்டனை அழைத்து "இந்த மாதிரிச் சிலம்பு உன்னிடம் இருக்கிறதைக் கொண்டுவா" என்றார்.

அம்பட்டன் சிலம்பைக் கண்டதும் நடு நடுங்கி நாவு குளறி, "அரசர் கோமானே, இம் மாதிரிச் சிலம்பு ஒன்று என் ஆயுளில் கண்ட தில்லை" என்றான்.

**கம்பர்** — அடே, கொடுத்துவிடு. நமக் கேன் இத்தனை பெரியதனம்? குடிப்பது கூழ் கொப்பளிப்பது பன்னீரா என்று சொன்னார். ராஜாவைப் பார்த்து, "இவன் புத்தி இவ்வ ளவே. சிறு பிள்ளை முதல் இவன் கை அழுத் தக்காரன். அடி உதவினைப்போல் அண்ணன் தம்பி உதவமாட்டான்" என்றார்.

அரசன் கோபமூண்டு ஏவலாளரைக் கூவி அழைத்து, அவனைத் தூணில் அழுந்தக் கட் டிப் போதுமான உதை கொடுக்கக் கட்டளை கொடுத்தார். அம்பட்டன் என்ன சொல்லியும் பயன் இல்லை. புளிய மிலாறுக் கட்டுகொண்டு வந்தார்கள்.

இனித் தப்ப வேறுவழி இல்லை என்று மயிர் வினைஞன் அறிந்து, தான் கம்பர் விஷயத்தில் நடந்துகொண்ட சூதைப் பூரணமாய் வெளியிட்டான். வித்வான்கள் அவனைத் தூண்டிவிட்ட சங்கதி தெரிந்த அரசன் சூது செய்த வித்வான்களை சிரசாக்கினை செய்வதே சரியென்று தீர்மானித்தான். அவர்கள் கம்பர் காலில் விழுந்து மன்னிப்புப் பெற்றுக் கொண்டார்கள்.

வேந்தன் தனது அருகிலிருந்த வித்வானைப்பார்த்து, பெரியவரே, உம்மை அடியாருக்கு வெளியிட வேண்டும். நீர் யார் என்றான். இன்னும் அவர் யார் என்று ராஜாவுக்குத் தெரியாது. கம்பர் நேரே பதில் சொல்லாமல் சரஸ்வதிக்குப் பூஜை செய்தார்.

சரஸ்வதி அங்கே தரிசனமானாள். அவள் கையில் வீணையும். ஒருகால் சிலம்புமாய் வந்து, 'கம்பா! சிலம்பு எங்கே' என்றாள். கம்பர் அரசன் கையில் இருந்த சிலம்பை வாங்கி நீட்ட, அது ஓடி அவளுடைய காலில் விழுந்தது. உடனே மறைந்தாள். அப்போது அரசன் அவர் கம்பர் என்று அறிந்தார். கம்பரிடம் தான் ஊழியம் பெற்றதற்காக மன்னிப்புக் கேட்டார். முன்னிலும் பலமடங்கு அதிகமான மரியாதைகள் செய்தார்.

சோழனும் இதற்குள் கோபம் ஆறி அவரை அழைத்து வரும்படி தூதரை அனுப்பினான். சேரன் தேர் ஓட்டக் கம்பர் சோழ நாடு போய்ச் சேர்ந்து மன்னனோடு சிநேகமானார்.

---

**வினாக்கள் :**

1. கம்பர் எவ்விதம் வித்வானானார் ?
2. கம்பர் ஏன் சோழ ராஜ்யம் விட்டுச் சேர மன்னனிடம் போனார் ?
3. கம்பருக்கு எவ்விதம் சேர ராஜாவின் தயை கிடைத்தது ?
4. ஆஸ்தான வித்வான் என்றால் என்ன ?
5. கம்பர் சாப்பாட்டுக்காகவும் உடைக்காகவும் என்ன வேலைகள் செய்தார் ?



## 20. நகை ஏதுக்கு?

தங்கக் கிளியே தாராவே,
　　தட்டான் வீட்டுக்குப் போகாதே.
சங்கத்தமிழின் தனி மணமே,
　　தங்கநகைகள் உனக்கேண்டி.
அழகிற் கிசைந்த என் கண்ணே,
　　அழகுக்கழகு ஆர் செய்வார்?

விழையும் வித்தை நாம்விட்டு
வேறொரு இழையும் உனக்கேண்டி?
குத்திக் காதைத்துளை யிட்டு,
குழையும் தோடும் பூணுவையோ?
புத்தி யுடையாய் நகைதன்னை
போயும் போயும் விரும்புவையோ?
தங்கச்சிலையே உன்னைவிட
தங்க நகையும் சிறந்திடுமோ?
சங்கு சரப்பளி தலைச்சுட்டி
நத்துப்பாட்டில் இவை யெல்லாம்;
அங்கம்நோக நீ யணிந்தால்
ஐயோ அது ஓர் பாரமன்றோ!
பங்கம் இல்லா வித்தையடி,
பாங்கான நல்லணியாம்.
நகையுடன் நீ வெளிச்சென்றால்
நாடியே திருடனும் வருவானே
பகையே பாப்பா அது உனக்கு
நகையல்ல நன்றாய் நகையம்மா

சங்கத்தமிழின் தனி மணம். தமிழ் இனிய பாஷை. தமிழ் நன்றாய் தெரிந்து கொள்ளுவது வாசனைத்தைலம் பூசிக்கொண்டதுபோல் இருக்கிறது.



# 21. இலக்கணப் பாடம் - IV

## வினைச் சொல்

நடந்த காரியத்தைக் குறிக்கும் சொல் தான் வினைச் சொல்.

உதாரணம் : ராமன் வில் வளைத்தான்.

நடந்த காரியம் என்ன? (வில்) வளைத்தான்.

பார்வதி பாடம் படித்தாள்.

நடந்த காரியம் படித்தாள்.

வினைச் சொற்கள்:—வளைத்தான். படித்தாள்

---

வினு :

1. பாடத்தில் உள்ள வினைச் சொற்களை எழுது.

2. சிரித்தாள், பாடினது, கட்டினுன், செய்தான், திறந்தான், பறக்கும், மலரும், ஓடும் இந்தவார்த்தைகளை வைத்து வாக்கியம் உண்டாக்கு.



# 22. குதிரைகள்

எனக்கு ஒரு நல்ல சிநேகிதன் உண்டு. அவன் பெயர் ஷண்முகம். அவன் தகப்பனுர் பெரிய சீமான். அவருக்கு இரண்டு குதிரை கட்டிய சாரட்டு வண்டி ஒன்றும் ஒரு குதிரை கட்டிய ஜட்கா வண்டி ஒன்றும் உண்டு. கோச்

வண்டிக் குதிரைகள் இரண்டும் ஒரே நிறமாயும் அழகாயும் இருக்கும். அவைகள் ஒன்றுபோல் கால் போட்டு நடப்பது பார்க்க சிறப்பாய் இருக்கும். அவைகளுக்குப் புல், கொள், ஓட் என்னும் தானியம் எல்லாம் கொடுத்து அருமையாய் போஷிப்பார்.



ஒருநாள் குருநாத பிள்ளையும் ஷண்முகமும் சாமிமலேக்குப் போனபோது நானும் அவர்களோடு போனேன். அப்பொழுது பிள்ளே அவர்கள் குதிரைகளேப் பற்றிப் பல விஷயங்கள் சொன்னர்.

குதிரை உலகத்தில் அதிகமாய் உழைக்கிற மிருகம். நாகரீகம் மிகுந்த தேசங்களில் சகல விதமான பாரவண்டிகளேயும் குதிரை இழுக்-

கிறது. பெரும் பாதைகள் போட முடியாத இடங்களில் அது மூட்டை சுமக்கவும் மனுஷ னைச் சுமக்கவும் பயன் படுகிறது. அயல் நாடு களில் நிலத்தை உழுவதற்கும், யந்திர உதவி யால் அறுவடை செய்யவும் நமது கவலை மாடு போல் உதவுகிறது. யுத்த காலத்தில் குதிரை இல்லாமல் சண்டை செய்வது கூடாத காரியம்.

தென் அமெரிக்காவின் சில தேசங்களில் செங்கல் செய்ய மண் மிதிப்பதற்காக குதிரை யை உபயோகிக்கிருர்கள். மீன் பிடிக்கிறவர்கள் ஜலத்தில் இறங்கி நனைந்து கஷ்டப்படாமல் வலைவீச குதிரைமேல் இருந்துகொண்டு மீன் பிடிக்கிருர்கள். கால்வாய்களில் படகு இழுக் கிறது. பனிக்கட்டி தரையை மூடிக்கிடக்கும் தேசங்களில் சக்கர மில்லாத வண்டிகளைக் குதிரை இழுக்கிறது. குதிரை பலமுள்ளதாயும் ஓட்டத்தில் வல்லமையுள்ளதாயும் இருப்ப தோடு, அறிவுடன் வளர்ப்பவனுக்கு விசுவாச மாய் நடந்து கொள்ளும் குணமும் உடையது. அதின் சுகுணங்களைக் காட்டும் கதைகள் கேட்க இன்பமானவைகள். அராபியர் பெட்டுவீனர் போன்ற வனந்தர வாசிகள் குதிரை வளர்த்து வியாபாரம் செய்து ஜீவிக்கிருர்கள்.

வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, ஆஸ்த்ரேலியா போன்ற புல் மிகுந்த தேசங்

களில் குதிரைகளை ஆயிரக்கணக்கான மந்தை களாக வளர்த்து காட்டு வேலை, வீட்டு வேலை யாவற்றிற்கும் உதவி செய்ய பழக்குகிறார்கள். சிறுவர் சிறுமியர் பாடசாலைக்குக் குதிரைமேல் சவாரி செய்கிறார்கள். இளம் பெண்கள் தைரியமாய் குதிரைமேல் சவாரி பண்ணுகிறார்கள். குதிரையின் அறிவும் சாந்த குணமும் அதை இவ்வளவு உபயோகமான வேலையாளாக்கு கிறது.

குதிரையின் விவேகத்தினாலும் நற்குணத் தினாலும் உயிர்கள் ரக்ஷிக்கப்பட்ட கதைகள் உண்டு. சர்க்கஸ் விளையாட்டில் அது அறி வுடன் காட்டும் வேடிக்கைகள் விசேஷமானது. குதிரையைக்கண்ட நாழிகையில் இந்தக் குதிரை கணக்குப் போடுமோ, நெருப்பு வளையத்திற் குள் பாய்ந்து போகுமோ, கோமாளியை முட் டப் போகுமோ என்று எண்ணுவோம்.

குதிரையைப்பற்றி ஒரு நல்ல கதை சொல் லுவோம். அமெரிக்காவில் சில இடங்களில் மூடுபனி உண்டாகும். அப்பொழுது நிற்கும் மரங்களைக்கூடக் காண முடியாது. ஒருநாள் ஒரு கேணியில் வேலை செய்திருந்த சில மனி தர் மூன்றுமைல் தூரத்தில் உள்ள தமது வீட் டுக்குப் புறப்பட்டார்கள். கொஞ்சத் தூரம் போவதற்குள் மூடுபனி உண்டானது. வழி

தெரியவில்லை. திசையும் தெரியவில்லை. பிரயா சையுடன் சற்று நேரம் நடந்தார்கள். நடந்த பின் புறப்பட்ட இடத்திற்கே வந்து தங்களு டைய கால் தடத்தையே மறுபடியும் கண்டார் கள். உறைபனி மொத்தையாய் விழுகிறது. சீக்கிரம் வீடுபோய்ச் சேராவிட்டால் ஜீவனுக்கு மோசம் வரும். அவர்கள் என்ன செய்வது என்று அறியாமல் திகைத்து நிற்கையில் அவர் களில் ஒருவன் என் குதிரை நமக்கு வழி காட் டுவாள். அவளை நம்புவோம் என்ருன். உடனே எல்லாரும் குதிரையை முன் நடக்கவிட்டுத் தாங்கள் அதைப் பின் தொடர்ந்து போய்த் தமது கிராமம் சேர்ந்தார்கள்.

இன்னும் ஒரு கதை சொல்லுவோம்:

அராபியன் ஒருவன் ஒரு குதிரை வளர்த் தான். அது குட்டிப் பிராய முதல் அவனிடம் வளர்ந்தது. அராபியன் அதைப் பிள்ளைபோல் நேசித்தான்.

ஒருநாள் ஒரு பட்டாளத்தார் மேற்சொல் லிய அராபியன் இருந்த கிராமத்தாரோடு சண் டைசெய்து ஜயித்தார்கள். கிராமத்தாரில் பலர் கைதியானுர்கள். அவர்களைக் கையும் காலும் வாரால் கட்டிக் கீழே மூட்டைகள் மாதிரிப் போட்டு விட்டு குதிரைகளைச் சுயாதீனமாய்க் கட்டியிருந்தது. இரவில் எல்லாரும் அயர்ந்து

தூங்கினார்கள். அப்போது நமது சிநேகிதனான அரபியன் உருண்டு உருண்டு தன் குதிரையண்டை போய்ச் சேர்ந்து வழக்கமான செல்லப் பெயரால் அதைக் கூப்பிட்டான். குதிரை துள்ளிக்குதித்து தன் கட்டை அறுத்துக்கொண்டு,



ஜமானைக் கட்டியிருந்த வாரைக் கவ்விப் பாய்ந்து ஓடிப் போனது. சத்துருக்களுக்கு எட்டாத தொலையில் கொண்டு சேர்க்குமளவும் பிடித்த பிடியை விடவும் இல்லை.

வினா:

1. குதிரைகள் என்ன வேலைக்கு உதவும்?
2. அதின் அன்பைக்காட்ட ஒரு கதை சொல்லு?
3. குதிரையின் அறிவைக் காட்ட ஒரு கதை சொல்லு?





## 23. ஆரஞ்சிப்பழம் – I

நாம் சாப்பிடும் உணவில் பழவகைகள் மிகவும் விசேஷமான பகுதி. இந்துதேசம் உஷ்ணதேச மானதால் இங்கே மிகவும் ருசி யான பழங்கள் கிடைக்கின்றன. சில வாசனைக் கும், வேறு பழங்கள் அழகிலும் சிறந்தவைகள். மேற்சொல்லிய சகல சற்குணங்களும் பொருந் தியது ஆரஞ்சிப்பழம் என்று சொல்லலாம்.

ஒருநாள் சொக்கலிங்கம் என்னும் சிறு வன் சேலத்தில் தன் வீட்டு வாசலில் நின்று

வீதி வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்முன். அவன் குழந்தைப் பிராயத்தில் பழத்தைக் கண்ணிலும் காணுத கிராமம் ஒன்றில் வளர்ந்த வன். சேலத்தில் ஆரஞ்சி, பலா, கொய்யா, பம்பிளிமாஸ் முதலிய பழங்களும் வகை வகை யான வாழைப்பழமும் விற்பதைப் பார்த்துச் சந்தோஷித்தான்: ஆச்சரியப் பட்டான். அச் சமயம் ருக்குமணி என்னும் பெண் ஒருத்தி மூங்கில் தட்டு ஒன்றில் நிறைய ஆரஞ்சிப்பழம் அடுக்கி வைத்துக்கொண்டு வந்தாள். இடைக் கிடையே "ஏ, ஆரஞ்சிப்பழம், ஆரஞ்சிப் பழம்" என்று கூவினுள்.

சொக்கலிங்கம் அவளைக் கூப்பிட்டு "அம் மணி, இதென்ன பொன் உண்டைகளா" என்று கேட்டான். ருக்மணி "அப்பா, பொன் உண்டை இனிக்குமா? புளிக்குமா? பசி ஆற் றுமா? வாசனையாய் இருக்குமா?" என்று பர பரப்பாய் பதில் சொன்னுள்.

பையன் வெட்கிப் போனுன். "அம்மா அணுவுக்கு எத்தனை கொடுக்கிருய்?" என்முன்; அணுவுக்கு ஆறுதான் எடு என்முள். சொக்க லிங்கம் அளவற்ற சந்தோஷம் அடைந்து அணுக் கொடுத்து ஆறுபழம் எடுத்துக் கொண் டான். ஏனென்முல் பழம் ஒன்று எத்தனை ரூபாயோ, நமக்கு இது கிட்டாது என்றே' யோசனை பண்ணிக்கொண்டு நின்முன். வாய்

திறந்தால் காரியம் கெட்டுப் போகுமெனப் பயந்து ஒன்றும் பேசவில்லை.

சொக்கலிங்கத்தின் கண்கள் பழங்களைப் பார்த்த வண்ணமாயிருந்தன. பழம் சாப்பிட ஆசையானுலும் தோல் உரிக்க மனதில்லை. சற்றுநேரம் பொறுத்து அவன் பழத்தின் மேல் தோல் நீக்கி, அதன் கீழிருக்கும் மெல்லிய வெண்போர்வையையும் அகற்றினுன். உள்ளே பிறைச் சந்திரன் மாதிரி இருந்த சுளைகளைப் பார்த்து ஒவ் வொன்ருய் எடுத்து ஒரு வெள்ளித் தட்டில் வைத்தான். சந்தோஷத்துடன் கைதட்டினுன்.

இத்தருணம் சொக்கலிங்கத்தின் தம்பி ராஜு அங்கே ஓடி வந்தான். ராஜு மகா துடுக்கன். அவன் அண்ணு ஒரு மந்திர வித்தை பார் என்று சொல்லிக் கொண்டே சுளைகளை ஒவ்வொன்ருய் காணுமற்போகச் செய்தான். பழரசம் அவன் வயிற்றில் வடிந்தது, சொக்கலிங்கம் நான்கு சுளைகளை எடுத்துப் பரிசோதித்தான்.

சுளையை வெண்பட்டுப் போன்ற தோல் மூடியிருந்தது. அதனுள் ஒரு புறம் ஒடுங்கி மறுபுறம் விரிந்து பள பள வென முத்துப் போல் இலங்கும் மணி பல அடுக்கி யிருந்தன. அவற்றின் மத்தியில் விதை விமரிசையாய் வீற்



றிருந்தது. "விதைதானே மரத்தின் குழந்தை. அதற்கு இவ்வளவு மேன்மையான சிங்காசனம் கொடுக்க வேண்டியது நியாயம்தான்" என்று சொல்லிக் கொண்டான்.

ராஜூ பழம் சாப்பிடும் வேலையில் கருத் தாயிருந்தான். 'அண்ணு, என்ன ருசி!' என்று கஷ்டத்தோடு பேசினுன். அவர்களுடைய தகப்பஞர் அதைக் கண்டு, எ"ன்னப்பா, இத் தனை பரபரப்பா? பேயன் புண்ணுக்குத் தின்ற மாதிரி! மட்டாய் சாப்பிடு, ஜலதோஷம் பிடிக் கும்" என்ருர்.

அப்போது வைத்தியர் சுப்புச் செட்டி யார் அங்கே வந்தார். அவர் அவனைக் கண்டு "ஐயா, குழந்தை சாப்பிடட்டும். இந்தப் பழம் உடலுக்கு நல்லது. இது சாப்பிட்டால் சிசுக் கள்கூட நல்ல சுக தேகிகளாய் வளரக்கூடும். ஜீரண சக்தியில்லாத ரோகிகளும்கூட இதைச் சாப்பிட்டால் குண மடைவார்கள்" என்ருர்.



# 24. ஆரஞ்சிப்பழம்-II

வைத்தியர் சுப்பு செட்டியார் அப்பாவுடைய சிநேகிதர். அவர் ஒருநாள் தமது மோட்டார் வண்டியைக் கொண்டுவந்து என்னையும் என்னுடைய நண்பரையும் அதில் ஏற்றிக் கொண்டு சேர்வராயன் மலைக்குப் போனார்.

சேலத்தில் தெருக்களில் பல இடங்களில் ஆரஞ்சி, சீத்தா, லக்கோட் முதலிய பழவகைகள் குவித்துக் கிடந்தது. அவற்றை விற்கிறவர்களும் விசாரமில்லாமல் கால் நீட்டி உட்கார்ந்து இருந்தார்கள்.

மலைக்குப் போகிறவழியில் பழம்கொண்டு வருகிற வண்டிகளையும், பழக்கூடை சுமந்து வரும் ஸ்திரீகளையும் கண்டோம். வண்டி வேகமாய்ப்போய் மலைமேல் ஏறிற்று. நாலு அல்லது ஐந்து மைல் ஏறின பின்புதான் காப்பித் தோட்டங்களும் உயர்ந்த மரங்களும் காணப்பட்டன.

சுப்பு செட்டியார் தமது தோட்டத்தில் எங்களை இறக்கிவிட்டார். மனம்போல் ஆரஞ்சி மரங்களுக்கிடையில் அலைந்தோம். குடகு ஆரஞ்சி, சீனிப்பழம், கமலா ஆரஞ்சி என்று பல தினுசுகளும் பார்த்தோம். அங்கே ஆகாயம் ஜில் என்று குளிர்ந்திருக்கிறது. சற்று நேரம்

காட்டுக்குள் உலாவுகிறதற்குள் மூன்றுதரம் சிறு தூறலும் ஒருதரம் பெருமழையும் வந்துவிட்டது. இப்படிப்பட்ட இடங்களில்தான் ஆரஞ்சிமரம் செழிப்பாய் வளரும் என்று செட்டியார் சொன்னார்.

சாயங்காலம் மழை பெய்யும்பொழுது வீட்டில் அடுப்பண்டை உடகார்ந்து தேத்தண்ணீர் சுடச்சுடச் சாப்பிட்டோம். ஒரு அடுப்பில் ஆரஞ்சிபழ 'முரப்பா' காய்ந்து கொண்டிருந்தது. அதை எடுத்து ரொட்டியில் தடவி எங்களுக்குக் கொடுத்தார். சாப்பிட வெகு ருசியாய் இருந்தது. பழம் கிடையாத இடங்களிலும், காலங்களிலும் அது உபயோகப்படும். ஒரு கண்ணாடிப் புட்டியில் நிரப்பி இரட்டை மூடி போட்டு என்னிடம் கொடுத்தார். நான் அதை வீட்டுக்குக் கொண்டு வந்தேன். ஆரஞ்சிப் பழ ரசமும் கொஞ்சம் தோலும் சர்க்கரையும் சேர்த்துக் காய்ச்சினதே முரப்பா. அதை அங்கிலேயர் 'மார்மலேட்' என்கிறார்கள். மலைக்குப் போன மறுநாள் ரங்கசாமி அண்ணா ஒரு பெரிய கடைக்கு எங்களை அழைத்துப் போனார். அந்தக் கடையில் பலதேசச் சரக்குகளும் இருந்தது. சீசாக்களிலும் தகர டப்பாக்களிலும் இருந்த தின்பண்டங்களை எங்களுக்குக் காட்டிச் சாப்பிடவும் கொடுத்தார். அதில் ஆரஞ்சிரசமும், முரப்பாவும் சேர்ந்த மிட்டாய் தினுசுகள் அதிகம்.

தாகத்திற்கு ஆரஞ்சி ஏல் என்னும் பானம் கொடுத்தார். நமது தோட்டங்களில் பயிர் செய்கிற நாரத்தைப் பழம் ருசியிலும் மணத்திலும் சற்று வித்தியாசமாய் இருக்கிறது.

---

**வினுக்கள் :**

1. ஆரஞ்சிப் பழத்தின் நிறம் என்ன ?
2. அதின் பாகங்கள் எவை ?
3. விதை எப்படிப் பாதுகாக்கப் படுகிறது ?
4. விதையினுல் என்ன பயன் ?
5. ராஜு பண்ணின வித்தை என்ன ?



## 25. நாய்களின் ஊழியம்

### கதைகள்

நாயானது பிராணிகளில் மிகவும் அறிவுள்ளதும் அன்புள்ளதுமான ஒரு வேலையாள். அது உண்மையுள்ள ஊழியன். அதனுல் நாயின் கதைகள் கேட்க மிகவும் பிரியம். நாகரீகமாய் வாழும் ஜாதிகள் நாயை உபயோகித்து நன்மை அடைகிருர்கள்.

ஐரோப்பாக் கண்டத்தில் அல்பஸ் மலைகளின் அழகைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டீர்களா ? இல்லையானுல் பூலோக பிரயாணி வாசகப் புஸ்தகங்களில் வாசித்துப் பாருங்கள்.

சுவிட்சர்லாந்து தேசத்தில் அல்பவ்ஸ மலைகள் இருக்கின்றன. அதில் பல ஏரிகளும் உறை பனி மூடிய பள்ளங்களும் இருக்கின்றன. மலைச் சரிவுகளில் ஆடு மேய்க்கிற ஜனங்கள் அநேகர் நடமாடுவார்கள். அநேக ஜனங்கள் வேடிக்கை விநோதம் பார்க்க அங்கே போவார்கள்.



அல்பவ்ஸ மலைகளில் அபாயத்திற்குள்ளான ஜனங்களுக்கு உதவி செய்யும்படி சில நல்ல சந்நியாசிகள் இருக்கிறார்கள். அவர்கள் நாய்களை வேலைக்குப் பழக்கி, மனிதன் செய்யக் கூடாத சகாயம் அவைகள் செய்யும்படி ஏற்படுத்தி யிருக்கிறார்கள். எப்படியென்றால், சில சமயங்களில் பிரயாணிகள் எவராவது கால் தவறி உறைபனி நிறைந்த பள்ளத்தில் விழுந்துவிடுவார்கள். அவர்கள் உயிரோடு புதையுண்டு அப்படியே ஜீவன் விட நேரிடும்.

மனிதர் அவரைக் கண்டு பிடித்து அவருக்குச் சகாயம் செய்வது கூடாத காரியம். உதவிக் காரரான நாய்களின் கழுத்தில் சில பிராந்திக் குப்பியும் கயிற்றுச்சுருளும் கட்டி யிருக்கும். கால் சறுக்கி விழுந்து, மூர்ச்சித்து உதவியற்றுக் கிடக்கும் மனிதர் நாய் கொடுக்கும் ஜீவாமிர்தத்தை உட்கொண்டு எழுந்து வெளியேறி வருவார்கள். அல்லது அவர் இருப்பிடத்தைச் சந்நியாசிகள் நாயின் உதவியால் கண்டு, அவர்களைத் தூக்கி எடுப்பார்கள்.

ஒரு சமயம் ஒரு தனவானும் அவன் மனைவி மக்களும் அல்பவ்ஸ் மலைநாட்டில் பிரயாணம் செய்தார்கள். அவனுடைய சிறிய மகனும் அவனைப் பாதுகாக்க ஏற்பட்ட வேலையாளும் ஒரு குதிரைமேல் இருந்தார்கள். அக் குதிரை கால் சறுக்கி ஒரு ஆழமான பள்ளத்தில் விழுந்தார்கள். பிரபு மகா வருத்தத்தோடு சந்நியாசிகளின் வீடு போய்த் தன் கஷ்டத்தைச் சொன்னன். அவர்கள் அவனுக்குத் தைரியம் சொல்லித் தமது நாய்களில் பெயர் பெற்றதை அனுப்பினர்கள்.

துரை நாயோடு போய் அது மறையும் மட்டும் பார்த்தான். அப்புறம் வெகு நேரம் காத்திருந்தும் அது வராதபடியால் மிகுந்த ஏக்கத்தோடு சந்நியாசி மடத்துக்குத் திரும்பி

ஞன். என்ன சந்தோஷம்! நாய் மடத்தின் வாசலில் நிற்கிறது. சிறுவன் அதின் கழுத்தைக் கட்டிக்கொண்டு நிற்கிருன்! அவர்கள் மறுபடியும் பலசாலியான பல ஆட்களோடு போய், குற்றுயிராய்க் குழியில் கிடந்த வேலையாளையும் ரக்ஷித்தார்கள்.



உரைபனிக் குழியில் விழுந்த குழந்தையை ரட்சித்த நாய்

யுத்த காலங்களில் நாயை இரவில் காவல் வைக்கிருர்கள். சேனைவீரர் பலர் தூங்கினுலும், காவல்கார வீரன் தூங்கிவிட்டாலும். காவல்கார நாய் தூங்கிவிடாது. எதிரிகள் பத்து மைல்தூரத்தில் வந்தாலும் வாசனையால் அதை அறிந்து தன் எஜமான்களை எழுப்பிவிடும்.

நாயானது தன் உயிருக்கு மோசம் வந்த போதும் தன் எஜமானின் லாபத்தையே நாடும்.

முன் காலத்தில் பிரபு ஒருவன்மேல் ராஜாவின் விரோதிகள் கோபமா யிருந்தார்கள். ஏனென்றால் அவர்கள் ராஜாவையும் அவனுக்கு உண்மையான மனிதரையும் பகைத்தார்கள். சத்துருக்களுக்குப் பயந்து பிரபு ஒருநாள் தன் மனைவி மக்களைக் குதிரைகள்மேல் ஏற்றி இருட்டோடே அனுப்பிவிட்டான். அவனுடைய நாய் தன் எஜமானின் முகம்பார்த்து மிகவும் வருந்தினது. எஜமான் நாயைப் பார்த்து 'டாம், (நாயின்பெயர்) அவர்கள் தனியாய்ப் போவது நலம். நீயாவது நானாவது துணையாய்ப் போனால் சத்துருக்கள் அவர்களைக் கொன்று போடுவார்கள்' என்று சொன்னான். பின்பு மெத்தை வீட்டுக்குப் போய்விட்டான்.

சத்துருக்களின் சேனைகள் பிரபுவின் வீட்டில் பிரவேசித்தபோது நாய் அவர்களை வீரமாய் எதிர்த்தது. அதை வெட்டிக் கீழே வீழ்த்தும் வரையில் ஒருவரும் மெத்தைப்படி ஏறக் கூடாதிருந்தது. அதனால் நாயை வீழ்த்தி மேலேபோய் பிரபுவைக் கைதியாக்கிக் கொண்டு வந்தார்கள்.

தன் ரத்தத்தில் புரண்டு, உயிர்போகும் தருணத்திலிருந்த நாய், எஜமானின் முகம் பார்த்து, வாலை ஆட்டிக்கொண்டு உயிர்விட்டது.

வினா :

1. ஆல்பஸ் மலைநாட்டில் நாய் எப்படி உதவுகிறது?
2. யுத்த காலங்களில் நாய் என்ன ஊழியம் செய்கிறது ?
3. நாயைப்பற்றி ஒரு நல்ல கதை சொல்லு.
4. நாயினிடத்தில் காணப்படும் நல்ல குணம் என்ன? நாயின் கெட்ட குணம் என்ன ?



# 26. புரு ராணிக்குப் பிறந்தநாள்

வேதாரணியம் என்னும் காட்டில் சுகுணன் என்னும் புரு அரசன் சுசீலி என்னும் தன்னுடைய பத்தினியுடன் சுகமாய் வாழ்ந்து வந்தது. அந்தக் காட்டின் சகல ஜாதிப்பக்ஷிகளும் அவைகளோடு சிநேகமாய் இருந்தன. கழுகு மாத்திரம் அவைகளைப் பார்க்க வருகிறதில்லை.

ஆவணி மாதம் 5-ம் தேதி சுசீலியின் பிறந்தநாள் கொண்டாடினார்கள். வனத்தின் பக்ஷிகள் எல்லாம் ராணிக்கு வாழ்த்துதல் சொல்லும்படியாக வந்து கூடின. சூரியன் இனிய ஒளிவீசினது. காட்டின் மரங்கள்குளிர்ந்த நிழல் தந்தபடியாலும் இளங் காற்று வீசினபடியாலும் ஒருவரும் விசிறியைத் தேடவில்லை.

அன்று மழையும் இல்லை. ஒரு பரந்த ஆல மரத்தில் விளையாட்டு நடந்தது.

அந்த வேளையில் கேலி பண்ணுகிற பக்ஷி ஒன்று எல்லாரையும் சிரிக்கவைத்துக் கொண்டிருந்தது. அது குயில் கூவுகிறமாதிரி மயில் கூவுகிறமாதிரி, கிளி பேசுகிறமாதிரி யெல்லாம் காட்டினது. இந்தக் கோமாளிப் பக்ஷி நமது தேசத்தைச் சேர்ந்தது அல்ல. ஆவ்ஸத்ரேலியாவி லிருந்து வந்து வேடிக்கை பண்ணினது.

சாப்பாடு முடிந்த பின்பு நடந்த சம்பாஷணை மகா விசேஷமானது. முதலாவது காகத்தைப் பாட்டுப்பாடச் சொன்னர்கள். அது கா கா கா என்று பாடினது.

சுகுணன் ஒவ்வொருவராய் கதை சொல்ல வேண்டும் என்றது. ராஜா பேச்சு நல்லது என்று சொல்லும் பாவனையாய் சகல பக்ஷிகளும் சிறகை அடித்து, காகா, கீகீ, கூகூ, கிரிச், கிரிச், ட்விட்ட்விட் என்று சத்தம் செய்தன. அதுதான் அவைகள் கைதட்டும் விதம்.

காகம் முதலாவது கதை சொல்ல எழுந்து சற்று உயரமான ஒரு கொம்பில் உட்கார்ந்து கொண்டு சொன்னது. ஒருநாள் இளம் பெண் ஒருத்தி கிணற்றோரம் துணி துவைத்துக் கொண்டிருந்தாள். நான் விளையாட்டுத்தனமாய்

அவளுடைய சோப்பை எடுத்துக் கொண்டு போய் அண்டை வீட்டுக் கூரைமேல் போட்டேன். உடனே ஒரு கிழவி ஓடி வந்து பெண்ணை அடித்தாள். அதைப் பார்த்து நான் அவள் இடுப்பிலிருந்து கீழேவிழுந்த கொத்து சாவியை எடுத்துக்கொண்டு சட்டெனப்பறந்து போனேன் என்றது. பக்ஷிகள் கொல் என்று நகைத்தன.

இரண்டாவது குயில் தான் மனிதரிடம் கண்டவிசேஷங்களைச் சொல்லத் தொடங்கிற்று. "நான் மனுஷரோடு அதிகமாய் பழகுகிறவன் அல்ல. எனக்கு அயல் வீட்டுக்காரியான தேன் சிட்டு சொன்னதைச் சொல்லுகிறேன். புங்கனூரில் சங்கன் என்று ஒரு வாலிபன் இருந்தான். அவனுக்கு மங்கை என்று பெயர் உள்ள ஒரு சிறுமனைவி இருந்தாள். சங்கனுக்கு வயது 25, மங்கையின் வயது 12.

ஒருநாள் அவசரமான தந்திச் சமாச்சாரம் ஒன்று வந்தது. மங்கை அச் செய்தியைத் தனது நாயகனுக்கு அறிவிக்கும்படியாக, சிறு கடிதம் ஒன்று எழுதி அனுப்பினாள். அவனோ அதை வாசிக்கமாட்டாமல் மடியில் வைத்துக் கொண்டான். சாயங்காலம் வீட்டுக்கு வந்து காரியம் விசாரித்து அறிவதற்குள் தந்திச்செய்தி வீணாகி வெகு நஷ்டமும் வந்தது.

ஆனால் சங்கன் பெண் கல்வி ஆகாதென்று எல்லாருக்கும் போதித்தான் என்று குயில் இனிமையாய்ச் சொல்லி முடித்தது. பக்ஷிகள் இதைக் கேட்டு ஆரவாரம் பண்ணி நகைத்தன.

இதற்குப்பின் மயில்கள் பல கூடி நடனம் ஆடின. கிளிகள் மனுஷர் சொல்லிக்கொடுத்த பேச்சு எல்லாம் பேசின. அக்கா, அக்கா, யாரடா திருட்டுப்பயல், கர்த்தர் நல்லவர் என்று சொன்னதையே திருப்பித்திருப்பிச் சொல்லின.

கடைசியாகப் புறாக்கள் கரணம் போட்டு விளையாட்டுக் காட்டின பின்பு எல்லாப் பக்ஷிகளும் கூடி புறா ராஜாராணி நீடூழி வாழ்க என்று ஒரு மங்களம் பாடித் தமது கூடுகளுக்குப் போயின.



## 27. சினிமா - அசை படக்காட்சி

"சீத்தா! நேற்று எங்கே போனாய்? நான் ஏழு மணிக்கு உன் வீட்டுக்கு வந்தேன், வீடு பூட்டியிருந்தது. ராமசாமியைத் தேடினேன். அவனும் வீட்டிலில்லை. எங்கே போனீர்கள்?"

"அசைபடம் பார்க்கப் போனோம்."

"அது என்ன அசைபடம்? படம் கூட அசையுமா?"

"படம் காட்டுகிறார்கள். அந்தப் படம் சுய ரூபத்திலும் சற்று பெரிதாய் ஒரு திரையில் காணப்படுகிறது. எல்லாம் நிசமாய் நடப்பது போலவே தெரிகிறது.

"நீ கண்ட படங்களைப்பற்றிச் சொல்லு."

"ஒரு பெரிய கூடாரத்தில் படம் காட்டினார்கள். நாங்கள் உள்ளே போகையில் மின் சார தீபங்கள் ஜொலித்தன. ஒவ்வொரு தீபமும் ஒரு சிறு சூரியனைப்போல் பிரகாசித்தது. வாத்தியக்காரர் பலவித ராகங்களும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். சற்று நேரத்தில் தீபங்கள் எல்லாம் திடீரென்று மறைந்தன."

',என் அப்படி ?"

"உடனே ஒரு மனிதன் ஒரு பெரிய குதிரைமேல் வந்தான். அவனோடு இரண்டு ஸ்திரீகளும் குழந்தையும் வேறு சிநேகிதரும் பேசி வழி அனுப்புவதுபோல் இருந்தது. சற்று நேரத்தில் அவன் புறப்பட்டுப் போவது போலும் வேறுபல குதிரை வீரர் வந்து அவனோடு சேர்ந்து ஒரு பெரும் படையாவதுபோலும் தோன்றினது. அண்ணா, ஒரு பட்டாளம் யுத்தத்திற்குப் புறப்பட்டுப் போகிறது என்று சொன்னார். பின்பு காலாட் படை வந்தது. பட்டாளத்தின் முன்னால் வாத்தியக்காரன் மேளம் கொட்டிக்கொண்டே போனான்.

அவர்கள் ஒரு அழகிய நகரின் வீதிவழி நடந்து போனார்கள். பட்டாளம் சற்று நேரத்தில் மலைகளுக்கு இடையில் போனது. பின்பு திடீரென்று கடலும் கப்பல்களும் காணப்பட்டன.

"கடல் நான் கண்டதில்லை."

"படத்தில் கடல் தற்சொரூபமாய்த் தெரிகிறது. அது அலை அடிக்கிறதும் சாமான்கள் கப்பலில் ஏற்றும் ஆட்கள் திரிகிறதும், கப்பல் கரையோரம் நிற்பதும் என்ன அற்புதமாய் இருக்கிறது."

"இன்னும் என்ன பார்த்தீர்கள்?"

"ஒரு நல்ல மாளிகை காணப்பட்டது. அது ஒரு சிங்காரத் தோட்டத்தின் மத்தியில் இருந்தது. மாளிகையில் விருந்து நடந்தது. பெரிய மனுஷர் பலர் வெகு அழகாய் உடுத்திக் கொண்டு அங்கே வந்தார்கள். தோட்டத்தில் அவர்கள் உலாவித் திரிவதும் ஆசனங்களில் உட்கார்ந்து பேசிக்கொண்டு இருப்பதும் வெகு விநோதம். பின்பு வரிசையாய்ப் பல மேசைகள் போட்டிருந்தது. எல்லாரும் சாப்பிட்டு, பின்பு இரண்டு இரண்டு பேராய் கைகோத்துக் கொண்டு நடனம் ஆடினார்கள். வாத்தியங்கள் ஆட்டத்துக்கு இசைந்தபடி வாசிக்கப்பட்டன. இப்படி எல்லாரும் இன்பமாயும் வேடிக்கையாயும் காலம் போக்குந் தருணம் திருடன் ஒரு

வன் மாளிகைக்குள் வந்தான். வேலைக்காரன் ஒருவன் அவனுக்குக் கதவு திறந்துவிட்டான். திருடன் வெகு அவசரமாய்த் தான் கொண்டு வந்த சாவியால் பெரிய இருப்புப் பெட்டியைத் திறந்து விடுகிறான். பெட்டியில் இருந்த பணம் நகை வேண்டியது எடுத்துச் சுருட்டிக் கொள்ளுகிறான். அந்த வேளையில் மோட்டார் வண்டி ஒன்று அங்கே வருகிறது. கள்ளன் அதில் ஏறிப்போய் விடுகிறான். வீட்டு எஜமான் தற்செயலாய் அந்த அறைக்குள் போய் மறைந்து நின்று நடந்த காரியத்தைக் கண்டு கொள்ளுகிறான். உடனே பேச்சுக் கருவியை எடுத்துப் பேசுகிறான். கணப்பொழுதில் போலீஸ் சேவகர் வருகிறார்கள்.

கள்ளன் மோட்டார் வண்டி போனவழியே தமது மோட்டாரைச் செலுத்திப் போகிறார்கள். கள்ளனைப் பிடித்தபோது பெரிய சண்டைகள் உண்டாகிறது. கள்ளன் கையில் இரும்புக் காப்பு போட்டு விடுகிறார்கள்.

"நகையும் பணமும் கிடைத்ததா?"

"விசாரித்துச் சொல்லுகிறேன். இன்னும் இரண்டு நல்ல வேடிக்கை காட்டினார்கள். முதலாவது பெரிய பசுக்கள் கூட்டம் ஒன்று கண்டேன். அவற்றின் பால் கறந்து பெரிய பீப்பாய்களில் ஊற்றி நிரப்பினார்கள். பாலைக் காய்ச்சிக் கட்டியாக்கி தகர டப்பாக்களில் போட்டு

அடைக்கிறார்கள். பின்பு டப்பாக்களுக்குமேல் காகிதம் ஒட்டி விடுகிறார்கள். இந்த வேலைகள் யந்திர சகாயத்தால் முடிகிறது. பால் கறக்கவும் ஆயுதம் வைத்திருக்கிறார்கள்.

இது முடிந்தபின், மாந்திரீகன் ஒருவன் வந்து ஒரு பீடத்தின்மேல் பிள்ளையார் மாதிரி வைத்தான். மறுபடி அதைத் தொட்டவுடனே ஒரு அழகான பெண் அதிலிருந்துவந்து மேட்டிமையாய்க் கால்வைத்து நடனம் ஆடினாள். மாந்திரீகன் கையை ஆட்டினவுடனே அங்கே திடீரென்று இரண்டு இரண்டு பேராய் அழகான பெண்கள் பலர் வந்து வந்தனஞ் செய்தார்கள். அப்புறம் எல்லாரும் கை கோத்து விளையாடினார்கள். அப்போது மாந்திரீகன் தன் கோலை வீசவே அந்தச் சீமாட்டிகள் யாவரும் திடீரென மறைந்தார்கள்.

உடனே வாத்தியக்காரன் ராஜ வாழ்த்து வாசித்தான். விளக்குகள் ஜொலித்தன, வீட்டுக்குத் திரும்பினோம்.

---

வினா :

1. சினிமா பார்த்தாயா ? நீ பார்த்த காட்சிகளைப் பற்றி எழுது.
2. சினிமா பார்த்தால் என்ன பயன் ?



ஔவையார் அருளிச்செய்த

# மூதுரை

மூது - முதிர்ந்த, உரை - வாக்கியங்கள்.

### நன்மை செய்தலின் பலன்.

நன்றி ஒருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொலென வேண்டா — நின்று
தளராவளர் தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால். (1)

என்று தருங்கொல் - பதிற் பலன் கிடைக்க ஏங்கிக் காத்திருத்தல். தருமத்தின் பலன் மிகவும் பெரிது. தளராவளர் - வளர்ந்துகொண்டே போகும்.

நல்லா ரொருவருக்குச் செய்த உபகாரம்
கன்மேல் எழுத்துப்போல் காணுமே-அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். (2)

ஈரமில்லா நெஞ்சம் - அன்பில்லாத நெஞ்சம் தண்ணீரற்ற வரண்ட பூமிக்கு ஒப்பிட் டிருக்கிறது. நேர் - சமானம். நீர்மேல் - தண்ணீர்மேல்.

### நல்ல குணசாலிகளின் தன்மை.

அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (3)

அட்டால் - காய்ச்சினுல். நட்டால் - சிநேகித்தால். நண்பர் - சிநேகிதர். நண்பல்லர் - நண்பு - அல்லர். பாலும், சங்கும் மேன்மக்களுக்கு உவமானம்.

குணசாலிகளால் உலகத்திற்குப் பயன்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று. (4)

நல்லோர் தரிசனம், வார்த்தை, சரித்திரம், சாவகாசம் யாவும் பயன் உள்ளவை.

கெட்ட மனிதரின் உறவு ஆகாது.

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார் சொல் கேட்பதுவும் தீதே — தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி யிருப்பதுவுந் தீது. (5)

தீயார் தீங்குக்குக் காரணமாயிருக்கும் விவரம் கூறப்பட்டது. திரு - அழகு.

பெற்ருேர் குணங்கள் பிள்ளைகளுக்கு வந்து சேரும்.

நீரளவே யாகும் நீராம்பல் தான்கற்ற
நூலளவேயாகும் நுண்ணறிவு — மேலைத்
தவத் தளவேயாகும் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம். (6)

நீர் ஆம்பல் - நீரில் வாழும் ஆம்பல் அது கிடக்கும் தண்ணீர் மட்டம் வரைதான் வளரும்.

உத்தமர்கள் யாவருக்கும் உபயோகமானவர்கள்.

நெல்லுக்கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மங்கே பொசியுமாம் - தொல்லுலகில்
நல்லா ரொருவர் உளரேல் அவர் பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை. (7)

*பொசியும் - கசிந்து ஊறும்; தொல் - பழைய.*

மேலான ஒழுக்கமும் கல்வியும்
உள்ளவர்களின் சிறப்பு.

சீரியர் கெட்டாலும் சீரியரே - சீரியர்மற்
அல்லாதார் கெட்டாலங் கென்னாகும் — சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக்கால். (8)

*சீரியர் - சிறந்த ஒழுக்க முடையவர்கள்.*

கல்வி அறிவில்லாதவன் ஞானம்.

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் தானுந்தன்
பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போலுமே
கல்லாதான் கற்றகவி. (9)

*கானம் - காடு; தீரக்கல்வி கற்காதவன் சபையில் பிரசங்கிக்கக்கூடாது.*

கல்வி அறிவில்லாதவன்.

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் — சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டாதவன் நன் மரம். (10)

வாசிக்கத் தெரியாதவனும், ஒருவர் பேசும் குறிப்பை அறியாதவனும் மரத்துக்கு ஒப்பானவர்கள்.

### சிநேகிதரின் சிறப்பு.

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டாம்
உடன்பிறந்தே கொல்லும் வியாதி-உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு. (11)

மா மலை - பெரிய மலை.

### கற்ருேர்க்கு உள்ள மேன்மை.

மன்னனும் மாசறக் கற்ருேனும் சீர்தூக்கில்
மன்னனிற் கற்ருேன் சிறப்புடையன் - மன்னனுக்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்ருேற்குச்
சென்ற விடமெல்லாம் சிறப்பு. (12)

மாசறக்கற்ருேன் - கல்வியை ஆராய்ந்து அறிந்தவன்.



# திரு அருட்பா

கல்லார்க்கும் கற்றவர்க்கும்
களிப்பருளும் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங்
கண்ணளிக்குங் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும்
வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும்
மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும்
நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட
மிடுகின்ற சிவமே
என்னரசே யான்புகலும்
இசையுமணிந் தருளே.

இதை எழுதினது ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள். கடவுள் எல்லாவித ஜனங்களையும் ஆதரிக்கிறார் என்பது இந்தப் பாடலின் கருத்து. அவர் தாமே ஆனந்தமாயும், மேன்மையாயும், ஞானமாயும், நீதியான தீர்ப்புச் செய்யும் மத்தியஸ்தராயும், சர்வ பாக்கியமும் நிறைந்த பரிபூரணராயும், இருக்கிறார். நடமிடுகின்றார் - கருத்தோடு கவனித்துச் சமீபமா யிருக்கிறார். சிவம் - மங்களம் செய்பவர்.



# அதிவீர ராம பாண்டியர்

அருளிச்செய்த

# நறுந்தொகைச் சுருக்கம்

## கல்வியால் வரும் மேன்மை.

எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை வருக வென்பார். (1)

தாழ்குலத்தில் பிறப்பதால் உண்டாகும் துயர்கள் பல, அவற்றைக் கல்வி மேன்மையால் நீக்கலாம்.

அச்சமுள் ளடக்கி அறிவகத் தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலின் அக்குடி
எச்சமற் றேமாந் திருக்கை நன்றே. (2)

கொச்சைமக்கள் - மேன்மைவிளங்காத பிள்ளைகள், அறிவு இல்லாத மக்கள்; எச்சம் - பிள்ளைகள்.

எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும். (3)

உலகம் மாய்கையானது. எழுநிலைமாடம் - ஏழு மெத்தை வீடு; கால்சாய்ந் துக்கு - தூண்கள் மக்கி வீழ்ந்து.

பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் கூடி
நெற்பொலி நெடுநக ராயினும் ஆகும். (4)

பெற்றம் - எருது, எருமை; பொற்றொடி - பொன் வளையல்: நெற் பொலி நெடுநகர் - பலவித சம்பத்தும் நிறைந்த நகர்.

இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே
இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே. (5)

இல்லோர் - ஏழைகள், இரப்பது-பிச்சைகேட்பது.

தறுகண் யானை தான் பெரிதாயினும்
சிறுகண் மூங்கிற் கோற் கஞ்சும்மே. (6)

தறுகண் - கொடுமைக் குணமுள்ள கண்கள் ; சிறு கண் - சிறிய கணு.

குன்றுடை நெடுங் காடேட வாழினும்
புன்றலைப் புல்வாய் புலிக் கஞ்சுமே. (7)

புன்தலை - அற்பமான தலை, புலிக்கிருப்பதுபோல் பலமான பற்கள் இல்லாத தலை, புல்வாய்-மான், புல் தின்னும் பிராணி என்பது கருத்து.

கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டிற்
கடும்புலி வாழும் காடு நன்றே (8)

கடும்புலி - கண்டவுடன் கொல்லும் தன்மையுள்ளது, ஆனால் அநீதியுள்ள அரசன் கொடுக்கும் கஷ்டம் தினமும் மனிதன் சுகத்தைக் கெடுக்கும்.

வித்தும் ஏரும் உளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே. (9)

உழவு செய்தால் சாப்பாடு கிடைக்கும், ஏரும் விதையும் இருக்க, அவற்றை உபயோகியாமல் இருப்பவன் பேதை. எய்த்து - சோம்பலுடன்.

தன்ஞ யுதமும் தன்கைப் பொருளும்
பிறன்கையில்கொடுக்கும் பேதையும்பதரே (10)

தன் ஆயுதமும் பணமும் தனக்கு உதவும், பதர் - மூடன்.

பொய்யுடை யொருவன் சொல் வன்மையினுல்
மெய் போலும்மே மெய் போலும்மே
மெய்யுடை யொருவன் சொல மாட்டாமையால்
பொய் போலும்மே பொய் போலும்மே. (11)

சொல்வன்மை - பேசும் சமர்த்து.

பழியா வருவது மொழியா தொழிவது. (12)

பிறருடைய குறைவான செய்கைகளை எடுத்துப் பேசாதே.




Printed at the "Caxton Press," Madras.—1932 (A)

